# for that millionaire look

Century
for 100% cotton
textiles

CENTURIZED
PRESHRUNK FABRIC

THE
CENTURY
SPG. & MFG. CO. LTD.,
BOMBAY 25 DD



Century's
Cosy-Cot
cotton SHIRTINGS
with Rich Woollen Feel

For Fashion Fabrics choose
Century Shirtings!

NPS-CM 16

# இவன் இப்பொழுதெல்லாம் துண்டு விழும் பட்ஜெட்டில் வாழ்வதில்லை

கிட்டத்தட்ட பட்டினி கிடந்த நாட்களெல்லாம் இவனுக்கு ஒரு கடந்த கால நிகழ்ச்சி. யூகோ பாங்கிலிருந்து கிடைத்த பணஉதவி மாதம் ரூ. 3600/-க்கு மேல் தொழில் நடத்தும் படியாக இவன் தொழிலின் போக்கையே மாற்றிவிட்டது.

தொழிலாளிகள் மாத்திரமின்றி மற்றும் சிறு வியாபாரிகள் விவசாயிகள். தனிப்பட்ட தொழிலாளிகள், டாக்டர்கள், பல்வைத்தியர்கள் போன்ற சுயத் தொழில் நடத்தும் சிகிச்சையாளர்கள். சிறு ஏற்றுமதியாளர்கள். இன்னும் சிறு தொழில்களில் ஈடுபட விரும்புவர்களுக்கும் யூகோ பாங்க் பண உதவிசெய்து உதவுகிறது.




**எங்கள் பலவிதமான பண உதவி திட்டங்களை நன்கு பயன்படுத்திக் கொண்டு உங்கள் வியாபாரத்தையும் தொழிலையும் விருத்தி செய்யுங்கள்.**

தலைமை காரியாலயம்: கல்கத்தா

UCO-11/71

# எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதைப் போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

தலைவலி பலவிதம். எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதை விரைவில் போக்க ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டால் போதும். ஸாரிடானில் சேர்க்கப் பட்டுள்ள கலவைப் பொருள்கள் தலைவலி, உடல்வலி மற்றும் பல்வலியுடன் கூடவே அநுபவமாகும் சோர்வையும் போக்குகின்றன; மற்றும் இதமளித்து புத்துணர்ச்சியும் ஊட்டுகின்றன. அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு!

**ஸாரிடான்**

'ரோஷ்'




'ரோஷ்' தயாரிப்பு

# அரசு - மிகவுயர்ந்த தரமான

# போர்ட்லெண்ட் சிமெண்ட் உங்களுக்குக் கிடைக்கிறது

அரசு சிமெண்ட் தரத்தில் தலைசிறந்து விளங்குவது: தரமே உருவானது. வலிமைக்கு மற்றொரு பெயரான அரசு, வலுவான கட்டுமானங்களுக்கு நேர் நிகரில்லாததாகும்.

அரசு சிமெண்டுக்குள்ள தனிச் சிறப்புத் தன்மைகள், அதனால் கட்டப்படும் எதையும் திண்மையும், நீர்க்காத திறனும் கொண்டு நெடுங்காலம் நீடித்து விளங்கச் செய்கின்றன.

அரசு ஒரு நவீன, விஞ்ஞான ரீதியான தயாரிக்கப்படும் போர்ட்லெண்ட் சிமெண்ட். குடியிருப்பு இல்லங்கள், பண்ணைக் கட்டிடங்கள், அலுவலக கட்டிடங்கள், தானியக் குதிர்கள், குழாய் அமைப்புகள், அணைகள், பாலங்கள், நீர்த்தொட்டிகள், நீர்த் தேக்கங்கள், நீச்சல் குளங்கள், அலங்கார அமைப்புக்கள் போன்ற எத்தனையோ கட்டுமான வேலைக்கு அரசு அருமையானதொரு சிமெண்ட்.

அரசு தமிழ்நாட்டிலேயே முதலாவதான ஓரே அரசினர் துறை சிமெண்ட் ஆலை




யால், கடுமையான தரக்கட்டுப்பாடு களைக் கையாண்டு உற்பத்தி செய்யப்படுகிறது.

## தமிழ்நாடு சிமெண்ட்ஸ்

(தமிழ்நாடு அரசுக்கு சொந்தமான நிறுவனம்)
ஆலங்குளம், இராமநாதபுரம் மாவட்டம்

## அரசு – வலிவும் வனப்பும் வாய்ந்தது

AC-16

# போர்ஹென்ஸ் பற்பசையால் தவறாது பிரஷ் கொண்டு பல் துலக்கினால் ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்

சிறியோர், பெரியோர், யாவரிடமிருந்தும் தாமாகவே தேடிவந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கும் போர்ஹென்ஸ் பற்பசையின் அற்புதமான விளைவுகளைப் பாராட்டுகின்றன. அந்தக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.

"போர்ஹென்ஸ் பற்பசைக்கும், அதை நான் தவறாமல் உபயோகிக்கச் சொன்ன டாக்டருக்கும் நான் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்...இதன் விளைவு, எனது 76வது வயதிலும், ஒரே மாதிரியாகப் படிந்துள்ள பளபளப்பான என் பற்கள் ஆரோக்கியமான ஈறுகளில் வலுவாக வேரூன்றியுள்ளன...".

—விபூதி பூஷன் போஸ், கல்கத்தா

"உலகப் புகழ் பெற்ற உங்கள பற்பசையை என் சிறு பிராயம் முதல் தவறாது உபயோகித்து வருகிறேன். இன்று என்னுடைய ஒவ்வொரு பல்லும் வலுவாக இருக்கிறது ... நான் போர்ஹென்ஸை எல்லா வகையிலும் சிறந்த பற்பசையாகக் கருதுகிறேன். ஏனெனில் அது பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை. அது ஒன்றே போதுமே...!"

—எஸ்.என். சட்டர்ஜி, கோயம்புத்தூர்

பற்களைத் தக்க முறையில் பராமரிக்க, இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் பற்பசையையும், போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத்பிரஷ்ஷையும் உபயோகியுங்கள் ... தவிர, உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.

இந்தப் புத்தகத்தைப்பெற, (தபால் செலவுக்காக) 20 பைசா தபால் தலையை "மானேர்ஸ் டெண்டல் அட்வைஸரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1" என்னும் முகவரிக்கு அனுப்புக. புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது.

K-6

பெயர் ____________ வயது ____________

முகவரி ____________________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் தயவு செய்து கோடிடவும்: ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, தமிழ், தெலுங்கு, மலையாளம், அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

90F-182 TAM

அலகாபாத் பாங்கில்
ஸேவிங்ஸ் பாங்க் கணக்குத்
தொடங்குவது சிறுபிள்ளை
விளையாட்டுப் போன்றது

## இன்றே ஒரு ஸேவிங்ஸ் பாங்க் கணக்குத் தொடங்குங்கள்

அலகாபாத் பாங்கிற்கு வந்து எங்களில் யாரிடமாவது கேளுங்கள் ரூ. 5 மட்டும் செலுத்தி, உடனே ஒரு சேமிப்புக் கணக்குத் தொடங்கி விடலாம். அவ்வளவு சுலபம். நீங்கள் ஒழுங்காகச் சேமித்து வரும் சிறு தொகை எவ்வளவு சீக்கிரமாகப் பெருகி வருகிறது என்று ஆச்சரியப்படுவீர்கள். இன்னும் செளகரியங்கள், சேவைகள்......

■ ரெக்கரிங் டிபாஸிட்டுகள் ■ கரண்ட் அக்கௌண்ட் ■ பிரயாணிகள் செக்குகள் ■ பிக்ஸட் டிபாஸிட்டுகள் ■ ஸேப் டிபாஸிட் லாக்கர்கள் ■ வியாபாரத்திற்கான பணவசதி ■ சிறு தொழில்களுக்கு கடனுதவி ■ உத்தியோகஸ்தர்களுக்குக் கடனுதவி



# அலஹாபாத் பாங்க்

ஹெட் ஆபீஸ்: 14, இந்தியா எக்ஸ்சேஞ்ச் பிளேஸ், கல்கத்தா-1

நீங்கள் தாராளமாகப் பழகுவதற்குரியதென்று உணர்த்துகின்ற பாங்க்

விரோதிகிருது, மார்கழி 11, டிசம்பர் 26, 1971









| சந்தா விவரம் : | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 23-00 | ரூ. 11-50 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



# பல்புகள் மாற்றுவதால் ஏற்படும் அதிகப்படி செலவை நிறுத்துங்கள். பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்திப் பாருங்கள்.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் உடனே பொருத்துவதற்கு ஏற்றவாறு தயாரிக்கப் படுகிறது—லாம்ப், லாம்ப் ஹோல்டர், ஸ்டார்டர், ஸ்டார்டர் ஹோல்டர் மற்றும் பலான்ட்டுடன் சேர்ந்து. முன்கூட்டியே அது ஒரு கனெக்டருடன் இணைக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவுதான் — ஸ்ட்ரிப்பின் இரு முனைகளையும் கயிற்றோ அல்லது செயினிலிருந்து தொங்கவோ ஆணிகள் போட்டு முடுக்கிப் பொருத்தி விட வேண்டும். மெயின்ஸை கனெக்டருடன் இணைக்க வேண்டும். இப்போது விளக்கு எரிவதற்கு தயார்.

ஒரு முறை நீங்கள் பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்தி விட்டால் பல்பு மாற்றங்களைப் பற்றிக் கவலையே படவேண்டாம். 5000 மணி நேரங்களுக்கு மேல் அது எரியக் கூடியது.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டில் ஒரு 40 வாட் ஃப்ளுரோஸென்ட் பல்பு உள்ளது. அது சாதாரண 40 வாட் பல்பைவிட 5 மடங்கு அதிகமாக வெளிச்சம் தரக் கூடியது. அதனால் குறைந்த அளவு மின்சாரத்தில் அதிக இடத்திற்கு வெளிச்சம் கிடைக்கிறது.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டில் பொருத்தப் பட்டிருக்கும் ஒவ்வொரு மூலப்பொருளும் அதை அதிக நாட்கள் உழைக்கவும், நீங்கள் செலவிடும் பணத்திற்கு அதிகமான வெளிச்சம் அளிக்கவும் உதவுகிறது. உதாரணமாக, அதிலிருக்கும் பலான்ட்டின் அமைப்பு லாம்பிலுள்ள முழு வாட்டேஜையும் பயன்படுத்துவதற்கும், அதனால் மிகுதியான வெளிச்சம் அளிக்கவும் தகுந்தவாறு செய்யப் பட்டிருக்கிறது. லாம்ப்ஹோல்டர், ஸ்டார்டர் ஹோல்டர் முதலியவை கச்சிதமாக இணைக்கப் பட்டிருக்கின்றன. அதனால் ஒவ்வொரு முறையும் உங்கள் ட்யூப் தொல்லை இல்லாமல் எரியும். ட்யூபை உருட்டவோ, திருகவோ வேண்டிய அவசியமில்லை.

வருங்காலத்தைப்பற்றி நன்கு சிந்தனை செய்து பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டில் பணத்தை முதலீடு செய்யுங்கள். அதைக் காட்டிலும் உயர்ந்தது எதுவுமில்லை.

**சிறந்த ஒரு லாம்ப் வேண்டுமா?**
**பிலிப்ஸ் TL வாங்குங்கள்.**
**பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்**

# பிலிப்ஸ்



கல்கி மலர் 31 இதழ் 22



தமிழ்த்திரு நாடுதன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# மங்களம்

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"ஸ்வராஜ்யா''வில் நான் எழுதியது பற்றித் தமிழக சட்டசபைகளில் நடந்த விவாதம் என் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. இதுபற்றி நான் கூற விரும்புவது இவ்வளவே: என்னைவிடத் தமக்கு அதிக தேசப்பற்று இருப்பதாக யாராவது எண்ணுவதோ, சொல்லிக் கொள்வதோ, எனக்கு வேடிக்கையாகத் தோன்றுகிறது. ஆக்கிரமிப்பை எதிர்த்து இந்தியாவைப் பாதுகாப்பதில் என்னைவிட ஒருவர் அதிகம் ஈடுபாடு கொண்டிருப்பதாக எண்ணுவது பெரிய விநோதம்.

நமது ராணுவம் அற்புதமாகச் செயலாற்றி, நம் மக்கள் அனைவரின் வாழ்த்துக்களுக்கும் பாத்திரமாகிறது. நமது வீரர்கள் தொடக்கத்திலிருந்தே புரிந்த சிறப்புப் பணி நீடித்து விரைவிலேயே யாஹ்யாகானின் பிடியிலிருந்து கிழக்கு வங்காளம் முழுவதும் விடுதலை அடைந்து விட்டது. மனிதப் பண்புக்கு உரிய இரக்கத்திலிருந்து உதித்த பணியை இந்தியா பூர்த்தி செய்து விட்டது. கிழக்கு வங்கம் தன்னைச் சோஷலிஸ்ட் குடியரசாகப் பிரகடனம் செய்திருக்கிறது. இதனால் ஐ. நா. பொதுச் சபை பங்களா தேச தனி அரசை அங்கீகரித்து, சுதந்திர நாடாக அதற்கு அங்கம் தருவதற்கு வசதி ஏற்படலாம். சீனத்தின் மாய மாலங்களுக்கு பங்களா தேசம் இரையாகாது என நம்புவோமாக! மக்களின் சுதந்திர வாழ்வைக் கம்யூனிஸ்ட் நாடுகளைப் போல் கெடுத்து விடாமல் அது காத்துக் கொள்ளும் என்றும் நம்புவோமாக.

வங்காள தேச நடவடிக்கை மங்களமாக முடிந்ததை அடுத்து மேற்கு முனையிலும் யுத்த நிறுத்தத்துக்கு உடனடியாக உத்தரவு பிறப்பித்துள்ள ஸ்ரீமதி இந்திரா காந்தியைப் பாராட்டுகிறேன். எதிர்த்தரப்பு என்ன செய்கிறது என்று பாராமல், நாமாகவே யுத்தத்தை நிறுத்திச் சமாதானத்துக்கு முதல் நடவடிக்கை எடுத்ததால் இந்தியாவின் உலக அந்தஸ்து உயர்ந்து விட்டது.

டிசம்பர் 17-ந் தேதி மாலை நாலு மணிக்கு வந்துள்ள செய்திப்படி யாஹ்யாகான், இந்திய சர்க்காரின் ஒருதலைப்பட்ச யுத்த நிறுத்தத்துக்கு இசைவாகத் தாமும் மேற்குப் பகுதியில் போரை நிறுத்த இணங்கி விட்டார். எந்த நல்ல விஷயத்திலுமே, எதிராளி என்ன செய்கிறார் என்பதை எதிர்பாராமல் ஒரு தரப்பினர் தீரத்துடனும் நம்பிக்கையுடனும் முதலடி வைப்பதை சஞ்சீவி மருந்தாகக் கருதி, வெகுநாளாக வற்புறுத்தி வந்திருக்கிறேன். அந்த மருந்தை இந்திய சர்க்கார் பிரயோகித்ததன் பயனாக யாஹ்யாகானும் வழிக்கு வந்ததில் வியப்பில்லை. நாம் அனைவரும் மகிழ்ச்சி அடையலாம்.

மேற்கு முனையில் போர் நிறுத்தம் செய்ய முதலில் மறுத்தார் யாஹ்யாகான். தமது நிர்வாகத்தில் ஏற்பட்ட ஏமாற்றம், தோல்வி ஆகியவற்றிலிருந்து தம் நாட்டு மக்களின் கவனத்தைத் திருப்பவே இப்படிப் பேசிப் பார்த்தார். யாஹ்யாகானின் தவறுக்கும் அந்தத் தவறின் விளைவுகளுக்கும் அமெரிக்கா அவருக்குத் தந்த உதவியை ஒரு பெரிய காரணமாகச் சொல்லலாம். எது எவ்வாறாயினும் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்பட்ட போர் முடிந்து விட்டது. இதைப்பற்றி அனைவரும் மகிழ்ச்சி அடையவேண்டும். போர் நின்று விட்ட போதிலும் சமாதானத்தைப் பற்றிப் பேச்சு நடைபெற வேண்டும். அதில் பல சிக்கல்கள் இல்லாமல் இல்லை. அவையும் நல்ல முறையில் முடிந்துவிடும் என்று பிரார்த்திப்போமாக!

# வாழ்க, வங்காள தேசம்!

**க. சந்தானம்**

கிழக்கு வங்கத்திலிருந்த பாகிஸ்தான் துருப்புக்கள் எந்த நிபந்தனையுமின்றி சரணாகதி அடைந்தவுடன், சுதந்திர வங்காள அரசு பூரணமாக நடைமுறையில் செயல்படத் தொடங்கிவிட்டது. 1970 டிசம்பரில் நடந்த தேர்தலின் போது ஷேக் முஜிபுர் ரஹ்மான் வற்புறுத்திய ஆறு அம்சத் திட்டத்திலேயே வங்காள தேசத்தின் சுதந்திரம் உட்கிடையாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தத் திட்டத்துக்கு வாக்காளர்களின் அமோகப் பேராதரவை அவர் பெற்றார். அப்போதே பாகிஸ்தான் ஜனாதிபதி யாஹ்யாகான் அந்த அம்சங்களை ஏற்றிருந்து, முஜிபுர் ரஹ்மான் பாகிஸ்தானின் பிரதமராக நியமிக்கப்பட்டிருந்தால், கிழக்கு — மேற்கு பாகிஸ்தான்கள் முதலில் ஒரு கூட்டரசாகவும், பிறகு தனி ராஜ்யங்களாகவும் ஆகியிருக்கும். ஜின்னாவின் இரு தேசக் கோரிக்கையில் எப்படி பாகிஸ்தான் பிரிவினை உள்ளடங்கியிருந்ததோ, அப்படியே முஜிபுர் ரஹ்மானின் தேர்தல் அறிக்கையில் கிழக்கு வங்கத்தின் சுதந்திரமும் உள்ளடங்கியிருந்தது. ஆயினும் அந்தத் திட்டத்தின்படி, சுதந்திரத் தனி ராஜ்யமாக வங்காள தேசம் அமைவதற்குச் சில ஆண்டுகள் பிடித்திருக்கும். ராணுவ சர்வாதிகாரியான யாஹ்யாகானின் ராட்சஸ அடக்குமுறை காரணமாகச்! சுதந்திர வங்காள தேசத்தின் உதயம் விரைவுபடுத்தப்பட்டது! சுதந்திரத்துக்காக வங்காள தேச மக்கள் பயங்கரக் கூலி கொடுக்கவேண்டியிருந்த போதிலும், சீக்கிரத்திலேயே சுதந்திரம் எய்திவிட்டனர். சென்ற ஒன்பது மாதங்களாக அம்மக்கள் உற்ற இன்னல்களை எண்ணுகையில் மேற்குப் பாகிஸ்தானக் கொடுங்கோலர்களின் மீது ஆழ்ந்த ஆத்திரமும் அருவருப்பும் ஏற்படாமலிராது; கொடுங்கோன்மைக்கு ஆளான கிழக்கு வங்க மக்களின் மீது எல்லையற்ற அநுதாபமும் பரிதாபமும் உண்டாகாமலும் இராது. இவ்வளவு குறுகிய கர்ப்பவாசத்தில் எந்த ராஜ்யமும் சுதந்திரம் எய்தியதில்லை எனலாம். அதேபோல் இஸ்ரேல் தவிர வேறெந்த ராஜ்யமும் சுதந்திரத்துக்காக இவ்வளவு இன்னல்களை அநுபவித்ததில்லை. இந்தியாவின் சகல மக்களும், உலகத்திலேயே பெரும்பான்மை மக்களும் புதிய வங்காள தேசத்தை வாழ்த்தி வரவேற்று, அதற்கு இறைவனின் இன்னருளைப் பிரார்த்திப்பார்கள்.

கிழக்கு வங்கத்திலிருந்த கணிசமான பாகிஸ்தான் ராணுவத்தைப் பதினைந்தே நாட்களுக்குள் அடிபணிய வைத்ததில் இந்திய ராணுவத்தின் தரைப் படையும், கப்பற் படையும், விமானப் படையும் அற்புதமாகப் பணி புரிந்திருக்கின்றன. கிழக்கு வங்க சுதந்திர வீரர்களின் முக்திவாஹினிப் படை பல மாதங்களாகவே கொரில்லாப் போர் செய்து பாகிஸ்தானித் துருப்புக்களுக்கு அத்தியாவசிய உபகரணங்கள் கிடைப்பதைத் தடுத்து, போக்குவரத்தைத் துண்டித்து, அந்த சைன்யத்தின் தன்னம்பிக்கையையும் சேதப்படுத்தியதால்தான் வெற்றி இவ்வளவு விரைவாகவும், இவ்வளவு தீர்மானமாகவும் அமைந்தது. எனவே இந்தியப் படைகளும், முக்திவாஹினியும் ஜெயலக்ஷ்மி அளித்த கௌரவத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளத் தக்கவராவர்.

நமது பிரதமரவர்களும், அவரது மந்திரிசபையும் தருணத்தின் தேவைக்கு உகந்த எழுச்சியைப் பெற்று மேன்மை கொண்டுள்ளனர். வெற்றி பெற்றதோடு மட்டுமின்றி, மறு நாள் இரவிலிருந்தே மேற்குப் பகுதியிலும் எதிர்த்தரப்பை எதிர்பாராமலே யுத்த நிறுத்தம் செய்வதாக முன்வந்ததன் மூலம் நமது சர்க்கார் அரிய ராஜநீதி அறிவைக் காட்டியுள்ளனர். இஸ்லாமாபாத்தின் ராணுவக் கும்பலுக்கு இது எவ்வளவு இழிவாகவும் கசப்பாகவும் இருந்தாலுங்கூட, இதை ஏற்றுக் கொண்டு போரை நிறுத்திவிட வேண்டியிருந்தது. இதற்கு இணங்காவிடில் கிழக்கே அடைந்ததுபோல் மேற்கிலும் படுதோல்வி கண்டு அடியோடு சரணாகதி செய்யும்படியாகவே ஏற்பட்டிருக்கும். 'இந்தியாவுடன் ஆயிரம் ஆண்டுகள் யுத்தம் செய்வோம்' என்று திரு பூட்டோ கூச்சல் போட்டாலுங்கூட, இந்தியாவிடம் துவேஷம் பாராட்டுவதில் லாபமே இல்லை என்பதையும், தங்களது எதிர்காலம் நன்றாக இருக்க வேண்டுமாயின் இந்தியாவுடன் நட்புறவு கொள்ள வேண்டியது அவசியம் என்பதையும் மேற்கு பஞ்சாபிலும், மற்றப் பகுதியிலும் உள்ள பாகிஸ்தான் மக்கள் உணருவர் என்று எதிர்பார்க்கலாம்.

ராணுவம் கைகலந்து செய்த போர் நின்றுவிட்டதால் உடனே பூரண சமாதானம் வந்துவிட்டது என்று அர்த்தமாகாது. சமாதானம் ஏற்படுத்தும் பொருட்டு மேற்குப் பாகிஸ்தான், இந்தியா, வங்காள தேசம் இவை முத்தரப்புப் பேச்சு வார்த்தை நடத்துகையில் பல கடினமான பிரச்னைகள் கிளம்

பும். நமது சார்பில் வற்புறுத்த வேண்டிய புதிய நிபந்தனை காச்மீரத்துக்குப் புது எல்லை வகுப்பதைக் குறித்ததாக இருக்கும். வங்காள தேசம் அடைந்த பொருள் நஷ்டத்துக்கு ஈடுசெய்யும்படி மேற்குப் பாகிஸ்தானைப் புதிய அரசு வற்புறுத்தும். இந்தப் பேச்சு வார்த்தைகள் தொடங்குவதற்கு முன்னரே புது அரசில் தலைமை ஏற்க வசதியாக ஷேக் முஜிபுர் ரஹ்மானை உடனே விடுவிக்க வேண்டுமென இந்தியாவும், வங்காள தேசமும் வற்புறுத்தும்.

பிரதமர் இந்திரா காந்தி அவர்கள், அமெரிக்க ஜனாதிபதிக்கு ஓர் உணர்ச்சி மிக்க கடிதம் எழுதியுள்ளார். ஜனாதிபதி நிக்ஸன் இந்தியா — பாகிஸ்தான் போருக்கு இந்தியாமீது குற்றம் சாற்றியிருப்பது எத்தகைய அநீதி என்று அதில் எடுத்துக் காட்டியுள்ளார். வங்காள தேச துயரச் சம்பவங்களில் அமெரிக்க ஜனாதிபதி பளுவான பொறுப்பைத் தாங்க வேண்டும் என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார்.

கடிதம் கூறும் உண்மைகளைப் பொதுவாக யாரும் ஒப்புக் கொண்டேயாக வேண்டும். உரிய சமயத்தில் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் முதலிய வல்லரசுகள் பாகிஸ்தான் மீது தமது முழுச் செல்வாக்கையும் பிரயோகித்திருந்தால் அப்போதே சமாதானத் தீர்வு கண்டிருக்கலாம். ஆனால் இப்போது இதைச் சொல்வது வெறும் ஜோஷ்யப் பேச்சுத்தான். பயங்கரமான ஒரு போரின் மூலம் விரைவிலேயே சுதந்திர வங்காள தேசம் உதிக்க வேண்டும் என்பது தெய்வக் கட்டளை போலும்! அதனை நாம் மகிழ்ச்சியுடன் ஏற்போம். இனி இந்தியா — பாகிஸ்தான் — வங்காள தேசம் ஆகியவற்றில் நிலவ வேண்டிய அமைதிக்கு மேற்சொன்ன வல்லரசுகளும் ருஷியாவுமாகச் சேர்ந்து பங்காற்ற வேண்டும். அந்தப் பங்குக்கு மிகுந்த முக்கியத்துவம் உண்டு. ஆரம்பத்தில் செய்யத் தவறியதை இப்போதேனும் கைநழுவ விடாமல் வல்லரசுகள் செய்யும் என நம்புவோமாக! மூன்று நாடுகளுக்கும்—குறிப்பாக வங்காள தேசத்துக்கு — அமைதி ஏற்படுத்துவதற்கு மட்டுமின்றி, மீண்டும் பொருளாதாரத்தைச் செப்பனிட்டுக் கொள்வதற்கும் வல்லரசுகளின் நல்லெண்ணமும் உதவியும் தேவையாகும்.

இந்தியாவும் வங்காள தேசமும் கொள்கிற உறவானது சமத்துவம், பரஸ்பர மதிப்புணர்ச்சி, நட்பு இவற்றின் உறுதியான அஸ்திவாரத்தின்மீதுஎழும்ப வேண்டுமென நம் மக்கள் ஏகமனதாக விரும்புகின்றனர். அடுத்த சில ஆண்டுகளில் அந்தப் புதிய நாட்டிடம் நாம் அன்றாடம் கொள்கிற தொடர்புகளில் மிகுந்த பொறுமையும், சகிப்புத் தன்மையும், அநுதாபமும் காட்ட வேண்டியிருக்கும். வங்காள தேசத்தின் புதிய ஆட்சியாளர்கள் நமது ஆலோசனைகளும் உதவியும் தங்களுக்குத் தேவை என்று உணரும்போதே, நாம் அவர்கள் மீது அளவுகடந்த செல்வாக்கைப் பிரயோகித்துத் தலையிடு செய்கிறோமோ என்று சந்தேகிக்கவும் கூடும். கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக பாகிஸ்தான் ஆட்சியாளர்கள் ஹிந்து—முஸ்லீம் வேற்றுமைகளை விஷமமாக வளர்த்துக் கொண்டே வந்திருப்பதால், இப்போது அகதிகளை நாம் அவர்களது இல்லத்துக்கும் பண்ணைக்கும் திருப்பி அனுப்புகையில் இந்தத் துவேஷம் கிளைப்பதற்கு இடமில்லாதபடி கூர்ந்த கவனத்துடன் காரியம் செய்ய வேண்டும். இந்தியாவுக்கும் வங்காள தேசத்துக்கும் இடையில் மக்களும் பண்டங்களும் கட்டுப்பாடின்றிப் போய் வருவதும், இவ்விரு நாடுகளிடை சுங்கத் தடைகளின்றிச் சுதந்திரமாக வியாபாரம் நடப்பதும் இரு தேசங்களுக்குமே நலன் பயக்கும். ஆயினும் வங்காள தேசம் தனது அபிவிருத்தியை முன்னிட்டு இவ்வினங்களில் சில தடைகள் அவசியம் என எண்ணினால் அவற்றை விதிப்பதற்கு நாம் அந்த நாட்டின் பூரண உரிமையை ஏற்க வேண்டும். இனி வங்காளி மொழி வங்காள தேசத்தின் தாய்மொழியாக மட்டுமின்றி ஆட்சி மொழியாகவும் ஆகும். மேற்கு வங்க இலக்கிய கர்த்தர்களுக்கும், பத்திரிகைத் துறைக்கும் இம்மொழி வளர்ச்சியில் சிறப்பான பங்கு இருக்கும். இந்த இனத்திலும் 'கலாசார ரீதியில் நம் மீது இந்தியா மேலாதிக்கம் செலுத்துகிறது' என்று வங்காள தேசம் எண்ணாதவாறு நாம் கவனத்துடன் செயலாற்ற வேண்டும். பரப்பளவில் வங்காள தேசத்தை ஒத்திருக்கும் உலகிலுள்ள பல நாடுகளைவிட வங்காள தேசத்தின் மக்கட் தொகை அதிகமாக இருக்குமெனினும், பெரிய பாரத தேசத்தின் அண்மையில் உள்ள வங்காள தேசத்துக்குத் தாழ்மை உணர்ச்சி உண்டாகலாம். இவ்வாறு சமநிலையில் இல்லாத இரு நாடுகளிடையே உண்மையான நட்பை நிலை நாட்டுவதற்கு, நம்மால் இயன்ற அவ்வளவு சாமர்த்தியத்தையும், தீர்க்காலோசனையையும், நுண்ணிய அநுதாப உணர்ச்சியையும் திரட்டிச் செயலாற்றுவோமாக!

# விநோபாஜி கொண்டாடிய  ராஜாஜி

(பவ்நார் ஆசிரமத்தில் ராஜாஜியின் பிறந்தநாள் விழா டிசம்பர் மாதம் 8ந்தேதி புதன்கிழமை காலை ஒன்பதரை மணி அளவில் அமைதியான சூழலில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. ராஜாஜி - 93 சிறப்பு மலரினை அவ்வமயம் பூஜ்ய விநோபாஜி வெளியிட்டு மகிழ்ந்தார்.)

**வ**ர்தா நகரை ஒட்டிய பவ்நார் ஆசிரமம். பண்டைக் காலத்து ரிஷி முனிகள் வாழ்ந்த நிலையை நினைவூட்டும் சூழல். ஆன்மிகத்தை வளர்க்கும் அற்புதமான அமைதிச் சூழ்நிலை.

பிரார்த்தனைக்காக விநோபா அடிகள் மரத்தடியில் அமர்ந்திருந்தார். அவரைச் சுற்றி இருநூறு — இருநூற்றைம்பது பேர்கள். பிரார்த்தனை தொடங்கியது. பாபுவுக்குப் பிடித்த பஜனை கீதங்கள் இனிமையான குரலில் ஒலிக்கலாயின. மகாத்மாவும் கூடவே இருப்பது போன்ற மயக்கம்! ஆம், ஆன்மாக்களுக்கு மரணம் ஏது? அதுவும் மகாத்மா போன்றவர்கள் அமரத்துவம் பெற்றவர்கள் அல்லவா? பொருள் பொதிந்த பஜனை கீதங்களைப் பொருளும் பண்ணும் இசைய ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியும் ஸ்ரீமதி ராதா விசுவநாதனும் இழைந்து பாடக் கேட்டு இணையில்லாத அத்துவைதானந்த நிலையைப் பெறுகிறது, கூடியிருந்த குறிப்பான கூட்டம்.

காந்தி அடிகளின் ஆன்மிக வாரிசான ஸ்ரீ விநோபா அடிகள் மெய்சிலிர்த்துப் போகிறார்! தமிழ் நாட்டின் தவப் புதல்வர், உலகம் போற்றும் உத்தமர் ஸ்ரீ ராஜாஜியின் 94வது பிறந்த நாள் விழா தமது நேர்ப் பார்வையில் நடப்பதுபற்றி அவருக்கு அளப்பரிய மகிழ்ச்சி!

காரணம், அகில இந்தியாவிலும் அதி விமரிசையாக நடைபெற இருந்த இந்த விழாவை நாட்டின் நெருக்கடி நிலையை உத்தேசித்து நிறுத்தச் சொல்லிவிட்டார் ராஜாஜி. ஆனால் அடக்கமான முறையில், அடக்கமே உருவான விநோபா அடிகளின் ஆசிரமத்தில் நடத்த மட்டும் அனுமதித்தார். அதில்தான் விநோபாவுக்கு எத்தனை மகிழ்ச்சி! இதோ அவரே கூறுகிறார் :

" 'இந்த விழா இந்தியாவெங்கும் நடைபெறுவதாக இருந்தது. ராஜாஜி அவர்களின் ஆணையின் பேரில் நிறுத்தி வைக்கப்பட்டது. பவ்நாரில் நடைபெறும் இவ்விழாவை மட்டும் அடையாளபூர்வமாக நடைபெற அனுமதித்துள்ளார்!' என்பதை ஸ்ரீ சதாசிவம் சொல்லக் கேட்டீர்கள்.

"ராஜாஜி அவர்களுக்கு என்னிடம் மிகுந்த பாசம் உண்டு. ராஜாஜி அவர்களை முதன் முதலாகக் காணும் வாய்ப்புக் கிட்டியபோதே என்னை அவர் தம் அன்பால் பிணைத்து விட்டார்.

"1923ம் ஆண்டு கொடி சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டு நான் சிறை சென்றிருந்தேன். என்பால் கொண்ட பாச உணர்வு காரணமாக என்னைக் காண அவர் சிறைக்கு வந்தார். அங்கு என் நிலை அறிந்து என்னைப் பற்றிப் பத்திரிகைகளுக்கு எழுதினார். என்

இடதுபுறம்: பாபுவுக்குப் பிடித்த பஜனை கீதங்களைப் பாடுகிறார் ஸ்ரீமதி எம். எஸ்.

வலப்புறம்: ராஜாஜி 93 மலரைப் பவ்நார் ஆசிரமத்தில் விநோபா அடிகள் பிரார்த்தனைக் கூட்டத்தின் மத்தியில் வெளியிடுகிறார். ஸ்ரீ ராஜாஜி அவர்களின் குண நலன்களைப் பண்டைக்கால ஆசிரமச் சூழலில், பொறுக்குமணியான கூட்டத்தில் உணர்ச்சிப் பெருக்குடன் விரித்துரைக்கிறார் ஸ்ரீ விநோபாஜி.



னிடம் அவர் கொண்டுள்ள அன்பு நிலையானது என்பதற்கு அடையாளம் ராஜாஜி-93 சிறப்பு மலர் என்றும் வெளியிடப்படுவதே ஆகும். தமிழ்ச் சொல்லான 'தந்தை' என்னும் சொல்லுக்கு இலக்கணமாகத் திகழும் ராஜாஜி அவர்களின் பிறந்த நாள் விழாவைக் கொண்டாடுவதில் நான் பெருமை காண்கிறேன்.''

ஆஞ்சநேயரின் அரும் பக்தர் ராஜாஜி அவர்கள். விசுவரூபம் எடுக்கும் ஆற்றல் படைத்த ஆஞ்சநேயரைப் போலவே, அகில உலகமும் இவ்விழா விசுவரூபம் எடுத்து ஈடு இணையின்றி நடைபெற வேண்டும் என்று விழாக் குழு தீர்மானித்திருந்தது. ஆனால் நாட்டின் நிலைமையை முன்னிட்டு, சீதையின் எதிரில் குறுகுருவம் கொண்டு சென்ற அநுமனைப் போல் சிறிதாக நடத்தாலும் சிறப்பாக நடைபெற்றது. எவ்வுருவம் தரித்தாலும் ஆஞ்சநேயர் ஆஞ்சநேயர்தானே ?

ஸ்ரீ ராஜாஜியின் பிறந்தநாள் விழாவில் மலர் வெளியீட்டுக் குழுவின் சார்பில் கலந்து கொண்ட 'கல்கி' ஆசிரியர் ஸ்ரீ டி. சதாசிவத்துக்கு ஒரே மகிழ்ச்சி, ராஜாஜி அவர்களை எப்படியோ இதற்கு இணங்க வைக்க முடிந்ததே என்று ! அந்த மகிழ்ச்சியில் மற்றோரையும் மகிழ வைத்துக் கூறுகிறார் :

''சர்ச்சிலுக்குப் பிறந்தநாள் வாழ்த்துத் தெரிவிக்கப் போன ஒருவர், 'தாங்கள் நூறாண்டு வாழ வேண்டும். அந்த நிறைவு விழாவுக்கு நான் வந்து வாழ்த்துத் தெரிவிக்க வேண்டும்' என்றாராம். 'உங்களுக்கு ஏன் இந்த ஐயம்? உங்களைப் பார்த்தால் சிறிய வயதினராக, நல்ல ஆரோக்கியமுள்ளவராகத்தானே தெரிகிறீர்கள்!' என்றாராம் சர்ச்சில்.''

இந்தக் கதையைக் கூறி ராஜாஜி அத்தகைய வாழ்வு வாழ அவர் பரமனை வேண்டிய பொழுது, அங்கு மகிழ்ச்சி ஆரவாரம் எதிரொலித்தது.

ஸ்ரீமதி சுசீலா நய்யார், ஸ்ரீ ராஜாஜியின் பிறந்த நாள் விழாவைக் குறிப்பிட்டு, ''எத்தனைதான் பெருவிழாக்கள் கொண்டாடினாலும் இதுபோன்று அருமையான விழா நடைபெற முடியாது. விநோபா போன்ற தவமுனிவர் ஜனகரைப் போன்ற ஸ்ரீ ராஜாஜி அவர்களின் பிறந்த நாளைக் கொண்டாடுகிறார் என்றால், இத்தகைய வாய்ப்பு எல்லோருக்கும் கிட்டக்கூடியதா? இதிலிருந்தே ராஜாஜியின் பெருமை விளங்கவில்லையா?'' என்று கூறி மகிழ்ந்தார்.

விழா மலரை வெளியிட்டு உரையாற்றிய விநோபா அடிகள் பல முறை ஸ்ரீ ராஜாஜி அவர்களின் நினைவில் நெகிழ்ந்து போனார் ; பேச்சே எழாமல் திணறினார் என்றால் அவரது உள்ளார்ந்த அன்பை என்னவென்பது ?

ஸ்ரீ விநோபா அடிகள் நிகழ்த்திய உரையின் சாரம் இதுதான் :

''ஸ்ரீ ராஜாஜி அவர்களின் வாழ்க்கை பல முகப்புகள் கொண்டது. உலகம் முழுவதும் அவரது அரசியல்துறை அறிவால் தான் கவரப்பட்டிருக்கிறது. அன்றுடம் அவர் அரசியலில் கருத்துக்கள் தெரிவித்து வருகிறார். இத்துறையில் கருத்து வேறுபாடுகளும் மோதல்களும் ஏற்படுவது இயல்பு, தேவையும்கூட; விந்தை ஏதும் இல்லை. இதில் ராஜாஜியின் குணமோ, குறையோ எதுவும் கிடையாது. குணம் – குறை என்று ஒன்றிருந்தால் அது அரசியலைத்தான் சாரும். வீர சிவாஜியின் குரு சமர்த்த ராமதாஸ் அரசியல் பற்றி விளக்கம் தரும் இடத்தில், 'அரசியலில் பல்வகைக் கருத்துக்கள் ஒன்றோடு ஒன்று மோதுவதும் சாடுவதும் இயல்பு. சலசலப்பும் கலகலப்புமாக இருக்கும். கேட்கக் கேட்க இனிக்கும். ஆனால் யாரும் யாருடைய

இடதுபுறம்: ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலட்சுமியும், ஸ்ரீமதி ராதா விசுவநாதனும் பிரார்த்தனைக் கீதங்கள் பாடுகிறார்கள்.

வலதுபுறம்: நெருக்கடி நிலைமை உத்தேசித்து பவ்நார் ஆசிரமத்தில் மட்டும் பிறந்த நாள் விழா எடுத்துச் சிறப்பு மலரை வெளியிட ராஜாஜி அனுமதித்துள்ளதை ஸ்ரீ சதாசிவம் எடுத்துரைக்கிறார்.



பேச்சையும் காதில் வாங்கிக் கொள்ளமாட்டார்கள். ஒருவன் எந்தக் கட்சியில், எந்தச் சூழலில், எந்தக் கருத்தில் ஈடுபட்டுத் தன்னை இணைத்துக் கொள்ளுகிறானோ, பிணைத்துக் கொள்ளுகிறானோ; அதையேதான் சிறந்த தெனக் கருதுவான்!' என்கிறார். எனவே, ராஜாஜியின் அரசியல் கருத்தோடு மாறுபாடு கொண்டவர்கள் பலர் இருக்கலாம். ஆனால் ராஜாஜியின் கருத்துக்களில் ஒரு தனித் தன்மையைக் காண்பார்கள். கூறுவதை அவர் நடுநிலைமையில் நின்று கூறுவார். பிடிவாதமோ ஓரவஞ்சனையோ இராது. நிலைமையில் மாற்றம் கண்டால், அதற்கேற்பத் தம் கருத்துக்களை மாற்றிக் கொள்வதற்கு அவர் தயங்கியதில்லை. ஒரு விஷயத்தை நடுநிலைமையோடு அணுகுவது மிகவும் அரிது. அதில் ஸ்ரீ ராஜாஜி தேர்ந்தவர். அரசியல் விஷயத்தில் அது அவருக்குக் கைவந்த கலை. இரண்டாவதாக அவர் யாருடனும் தனிப்பட்ட முறையில் பகைமை பாராட்டுவதில்லை. 'ஆண்டவன் எங்கும் உள்ளான். நாம் அனைவரும் ஆண்டவனின் மக்கள்' என்னும் உண்மையை அவர் அறிந்து கடைப்பிடிப்பவர். எனவே, யாரிடமும் பொறுமையோ பகைமையோ கொள்வதில்லை. மூன்றாவதாக, அவர் எந்தக் கருத்தை எப்பொழுது வெளியிட்டாலும் முன்னெச்சரிக்கையோடு இருக்கிறார். இந்த முன்னெச்சரிக்கைதான் அரசியலைப் பொறுத்தவரை பெருங்கேடயமாக விளங்குவது. இந்தக் கேடயம் இல்லையேல் அரசியலில் வெற்றி கிட்டாது. இந்தக் கைய முன்னெச்சரிக்கையோடு அவர் 'பாதுகாவல்' பணிபுரிகிறார். மக்களைத் தவறான வழியில் போகவொட்டாமல் பார்த்துக் கொள்கிறார்.

''அரசியலைப் போலவே, அவர் சட்டத் துறையிலும் நிபுணர். அரசியல் சாஸனம் அதாவது 'கான்ஸ்டிட்யூஷன்' விஷயத்தில் மிகவும் நுண்ணிய அறிவு படைத்தவர். ஸ்ரீ ராஜாஜி சிறந்த மானிட இயல் வல்லுநர். நீதி வழுவாத நெறியாளர். மக்களின் மனப்போக்கை நாடி பிடித்துப் பார்ப்பதில் ஈடு இணையற்றவர். சொல்லப் போனால் சின்னஞ் சிறு விஷயங்களிலும்கூட அவர் அக்கறை படைத்தவர். ஸயன்ஸ் பற்றிய அறிவும் அவருக்கு ஏராளம். பி. வி. ஜி. இயக்கத்தில் அவர் கருத்துத்தான் சரி என்பதே என் கருத்தும். அவரைப் போல் மனத்தை நேர் முனையில் வைத்திருப்பவர்கள் அரிதிலும் அரிது. எத்துறையிலும் வல்லுநரான ராஜாஜியிடம் எனக்கு மிகவும் பிடித்தது ஆன்மீகத் துறைக்கு அவர் செய்துள்ள அரும் பணியே.

''இன்றைய நன்னாளில் நான் வேண்டுவது என்னவென்றால், அவரது மற்றத் துறைகள் அனைத்தும் ஆன்மீகத் துறையில் இரண்டற ஒன்று கலந்துவிட வேண்டும், ஓடும் ஆறுகள் அனைத்தும் கடலில் ஒன்று கலப்பது போல். வாழ்க, இவ்வையகம்!''

---

## இக்கட்டான நிலை விடுபட்ட கலை!

தமது இடையறாத உழைப்பினாலும் முயற்சியினாலும் கிரிக்கெட் சங்கத்தின் காரியதரிசியாக வளர்ந்த ஸ்ரீ ஸ்ரீராமன் சேப்பாக்கம் மைதானத்திலே 'கிராண்ட் ஸ்டாண்ட்' சமீபத்தில் கட்டி முடிக்கப்பட்டதும் பெரு மகிழ்ச்சி அடைந்தார் என்று சொல்லவா வேண்டும்!

''1967ம் வருஷம் ஆஸ்திரேலியாவுக்கு விஜயம் செய்த இந்திய கோஷ்டியைத் தேர்ந்தெடுக்கும் பொழுது தமிழகக் கிரிக்கெட் ஆட்டக்காரரான வெங்கடராகவனை 'செலக்ட்' செய்யாமல் விட்டு விட்டனர். வெங்கடராகவன் விட்டுப் போனதைப் பற்றிப் பத்திரிகைகளில் பலத்த கண்டனமும் தமிழகக் கிரிக்கெட் ரசிகர்களின் ஏமாற்றமும் வெளிப்பட்டன. தமிழகத்தைச் சேர்ந்த நான் இந்தியக் கிரிக்கெட் செலக்ஷன் கமிட்டியின் கன்வீனராக இருந்தபொழுது இப்படி நேர்ந்தது எனக்கு மனத்தாங்கலைத் தந்தது. கிரிக்கெட் ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுப்பதில் எனக்கு உரிமை யில்லாவிட்டாலும், அந்தக் கமிட்டியின் கன்வீனர் என்று சொல்லிக் கொள்ள வெட்கமாயிருந்தது. திறமையுள்ள ஆட்டக்காரரைத் தேர்ந்தெடுக்காததற்காக ராஜினாமா செய்து விடலாமா என்ற எண்ணம் எழுந்தது. இந்த இக்கட்டான நிலையில் ஒரு வாரம் சென்றது. மறுபடியும் புனராலோசனை செய்தபோது, இந்தச் சாக்கில் கன்வீனர் பதவியை விட்டால் இத்தனை நாட்கள் செய்த தொண்டினை மறந்து, 'மாகாணப் பித்தன்' என்று பட்டம் கட்டி விடுவார்களோ என்ற ஐயம் எழுந்தது. நானாக ஆகத்





'திறமைக்கு என்றாவது பலன் கிட்டாமலா போகும்' என்று மனத்தைச் சமாதானப்படுத்திக்கொண்டு கன்வீனர் பதவியை ராஜினாமா செய்யும் யோசனையைக் கைவிட்டேன். வெங்கடராகவனும் செலக்ஷன் செய்யாததினால் 68 - 69 வருஷங்களில் தீவிரமாக உழைத்துத் தமிழகக் கிரிக்கெட்டில் பற்பல அரிய சாதனைகளைச் செய்து முன்னேறி வந்தான். மேற்கிந்தியத் தீவு, இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கு கிரிக்கெட் கோஷ்டி விஜயம் செய்கையில் உதவி காப்டனாகி, உலகப் புகழ்பெற்றது அந்த உத்வேகத்தின் விளைவுதான்! ஏமாற்றம் உத்வேகமாக உருமாறிச் செயல்பட்டிருக்கிறது என்பது பலருக்குத் தெரியாது!'' என்கிறார் ஸ்ரீ ஸ்ரீராமன். — குண்டுமணி

# கொஞ்சுமிளம் தென்றலோ, குலவ வரும் மல்லிகையோ!

கம கமக்கும் மல்லிகை மணம். இளமை கொழிக்கும் மேனியெழில். இரண்டையும் உங்களுக்கு வழங்கவே ஜெய் அழகு சோப். வில்லை கரைந்தாலும் சுகந்தம் குறையாத அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. உங்கள் பைந்தளிர் மேனி என்றும் பதினாறாகப் புதுமையுடன் பொலிய உபயோகியுங்கள் ஜெய்—ஜிகினைத் தாளுறை தரித்த ஒரே அழகு சோப்!

**உங்கள் புத்தெழில் பெருக ஜெய் அழகு சோப் மனங்கவர் மல்லிகை மணம் கமழ்வது.**




டாடா தயாரிப்பு.

**மிகச் சகாயமான விலையுள்ள இந்த டெடர்ஜென்ட் கேக் உங்களுக்கு அளிப்பது...**




**திருமதி அவர்களே, இது உங்களுக்கான போனஸ்!**




எத்தகைய நீரிலும் போனஸின் நுரைவளம் கொழிக்கும். ஏனெனில் இது சிறப்பாக சலவை செய்யும் ஒரு டெடர்ஜெண்ட் — சோப்பல்ல!

அதிக துணிகளை வெகு நன்றாக சலவை செய்ய துணிகளை நன்கு ஊறவிடுங்கள். உபயோகத்திற்குப் பின், போனஸை உலர்ந்த இடத்தில் வைக்கவும்.

இன்றுமுதலே துணிகளைப் பிரகாசமாக சலவை செய்ய உபயோகிப்பீர்

**போனஸ்**

சிறப்பாக சலவை செய்யும் டெடர்ஜெண்ட்!

டாடா தயாரிப்பு

CHTB-9-203 TAM



# விமானம் விண்டது; உயிர்களை உண்டது!

ஒரு வீட்டில் துக்கம் விசாரித்துவிட்டு வருவதென்றாலே நமக்கு எவ்வளவு மனச் சங்கடமாக இருக்கிறது? ஒரே சமயத்தில் இருபது பேர்கள் இறந்துபோக, அவர்களின் குடும்பங்களுக்கு ஒரே இடத்தில் ஆறுதல் கூறித் தேற்றுவதென்றால் அது எப்படிப் பட்ட மனசை உருக்கிப் பிழியும் காரியமாக இருக்கும்?

இத்தகைய நிலைதான் இந்தியன் ஏர்லைன்ஸ் பிரதம கமர்ஷியல் அதிகாரி திரு சக்கரவர்த்திக்கும் அவரது சகாக்கள் சிலருக்கும் ஏற்பட்டது. அண்மையில் மதுரைக்கருகே விமானம் ஒன்று விழுந்து நொறுங்கியதன் விளைவாக.

டிசம்பர் 15ந் தேதி மாலையில் அவரைச் சந்தித்தபோதுகூட அவர் முகத்தில் சோகம் அப்பிக் கொண்டிருந்ததைக் காண முடிந்தது.

''எங்கள் துயரம் இருக்கட்டும். விபத்தில் உயிரிழந்தவர்களின் உறவினர்களுக்கு நாங்கள் என்ன ஆறுதல் சொல்லிச் சமாளிப்பது என்றே புரியவில்லை. அதுவும் சாதாரண மரணமா? ஒருசிலர் மிகக் கோரமான முறையில் அடிபட்டு மடிந்திருந்தனர். அவர்களின் நெருங்கிய பந்துக்கள் அடையாளம் காட்ட உடலைப் பார்க்கக் கூடத் தயங்கினர். பலவித மொழிகளில் உறவினர்கள் ஆற்றி அழுது கொண்டிருந்ததைக் கேட்க வேதனை நெஞ்சைத் துளைப்பதாய் இருந்தது. அதன் பின் மூன்று நாட்கள் எனக்குத் தூக்கம் வரவேயில்லை. தென்பிராந்திய விமானப் போக்குவரத்தின் சரித்திரத்தில் கடந்த இருபது வருஷங்களாக விமான விபத்து என்பதே கிடையாது. இன்று இருபது உயிர்களைப் பறி கொடுத்து விட்டு நிற்கிறோம்'' என்றார் அவர் ஆழ்ந்த வருத்தத்துடன்.

விபத்தில் உயிர் தப்பிப் பிழைத்த பதினொரு பிரயாணிகளில் ஒருவரான திரு நம்பியார் மயக்கம் தெளிந்ததும் விமானச் சுவரில் ஒரு பெரிய ஓட்டை இருப்பதையும் அதற்கு அப்பால் வெளியே தரையில் ஒரு குழந்தை நின்று அழுது கொண்டிருப்பதையும் பார்த்தார்.

'அந்தக்குழந்தையைப் பார்த்த பிறகுதான் எனக்கும் வெளியே போகலாம் என்று தோன்றியது' என்றாராம் திரு நம்பியார்.

பின்னர் இவர் தட்டுத்தடுமாறி மலைச் சரிவில் இறங்கினார். தார் ரோட்டைக் கண்டதும் நிம்மதிப் பெருமூச்சுடன் உதவி கோரி அலறியபடியே நடந்தார். மேகமலை எஸ்டேட்டைச் சேர்ந்த சிலர் அவரது கூக்குரலைக் கேட்டு ஓடி வந்தனர்.

எஸ்டேட்டில் டெலிபோன் இல்லாதது பெரிய துரதிர்ஷ்டம். திரு பழநியப்பன் என்பவர் ஒரு மோட்டார் சைக்கிளைக் கடன் வாங்கிக் கொண்டு இருபத்து மூன்று மைல்கள் வளைவு நெளிவு மிக்க மலைப் பாதையில் சென்று ஃபோன் செய்தார். விமானம் விழுந்திருக்கும் இடம் தெரிந்ததும் உதவிக்குப் பலர் விரைவது எளிதாயிற்று.

ஆனால் இதற்குச் சில மணி நேரம் முன்பாகவே — மதுரை விமான நிலையத்துடன்

மேலே:
நொறுங்கிய விமானம்.

இங்கே: விமானம் செலுத்தும் குழுவைச் சேர்ந்த நால்வரும் விபத்தில் உயிர் துறந்தனர்.

□ விமான ஓட்டி காப்டன் ஸ்ரீ கே. எல். ரெட்டி.

□ உபசரிணைப் பெண் குமாரி ராமொன்று மக்ராபி.

□ உபசரிணைப் பெண் குமாரி பரிமளா ராவ்

விமானக் குழுவின் நாலாவது நபர் ஃபர்ஸ்ட் ஆபீஸர் ஸ்ரீ அகர்வால்.







பைலட்டின் ரேடியோ தொடர்பு அற்றுப் போனதுமே — இந்தியன் ஏர்லைன்ஸ் உயர் அதிகாரிகளுக்கு விவரம் தெரிவிக்கப்பட்டு அவர்கள் உடனே விமானத்தைத் தேட முயற்சிகள் மேற்கொள்ள ஆரம்பித்துவிட்டனர். முதலமைச்சரிடம் கூறியதுடன் கலெக்டர் திரு லக்ஷ்மிகாந்த பாரதிக்கும் விவரம் தெரியப்படுத்தி, போலீஸாரின் உதவி கோரினர். மாவட்ட மருத்துவ அதிகாரிக்கும் காயமடைந்தோரைக் காப்பாற்றத் தயாராயிருக்குமாறு முன்னறிவிப்புச் செய்யப்பட்டது.

ஆயினும் மாலை 4-40க்குப் பழனியப்பனின் டெலிபோன் செய்தி கிடைத்த பிறகுதான் விமானம் விழுந்த சரியான இடம் தெரிய வந்து பலரும் உதவிக்கு விரைய முடிந்தது.

இப்படி உதவியவர்களின் பெயர்களைத் திரு சக்கரவர்த்தி நன்றியுணர்வுடன் நினைத்து நினைத்து ஒருவர் விடாமல் சொன்னார். அந்த நீண்ட பட்டியலில் காணப்படும் அனைவருமே பாராட்டுக்குரியவர்கள். "குறிப்பாக டி. வி. எஸ். ஸ்தாபனம் செய்த உதவியை அளவிட்டுக் கூற முடியாது" என்றார் சக்கரவர்த்தி. "விவரம் தெரிந்ததும் உடனே தங்கள் ஆம்புலன்ஸ் வண்டியை அனுப்பி வைத்தனர். காயம் அடைந்தவர்களுக்கு முதல் சிகிச்சை அளிக்க, மதுரைக்குப் பலரைக் கொண்டு வந்து சேர்க்க லாரிகளையும் 'வேன்' களையும் அனுப்பினர். டி. வி. எஸ். ஊழியர்களும் பொதுஜனத் தொடர்பு அதிகாரியும் எங்களுடனேயே இருந்து முழுமையாக ஒத்துழைத்தனர்."

மிகவும் போற்றக்கூடிய தொண்டாற்றிய மற்றொருவர் திருமதி மத்தையாஸ். சரித்திரத்தில் படித்திருக்கிறோமே ஃப்ளாரன்ஸ் நைட்டிங்கேல் என்று, அவளைப் போல்தான் அன்று திருமதி மத்தையாஸ் அடிபட்டுத் தவித்துக் கொண்டிருந்த பயணிகள் பலருக்குத் தென்பட்டார். 5500 அடி உயரம், குளிர், மழை வேறு. திருமதி மத்தையாஸ் இல்லாதிருந்திருந்தால் அன்று மரணமடைந்தவர்களின் எண்ணிக்கை இன்னும் அதிகரித்திருக்கக்கூடும்.

மதுரை எர்ஸ்கின் ஆஸ்பத்திரிக்குக் காயம் பட்டவர்கள் கொண்டு வந்து சேர்க்கப்பட்ட பிறகு அந்த ஆஸ்பத்திரி ஊழியர்கள் காட்டிய பரிவையும் சுறுசுறுப்பையும் போற்றாமல் இருக்க முடியாது. போலீஸாரின் சேவையும் தடங்கலின்றிக் கிடைத்தது.

மறு நாள் காலையில் ஒரு விசேஷ விமானத்தில் பயணிகளின் உறவினர் மதுரைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். இறந்தவர்களை அடக்கம் செய்யவோ அல்லது சொந்த ஊருக்கு எடுத்துப் போகவோ சகலவிதமான உதவிகளையும் இந்தியன் ஏர்லைன்ஸ் அதிகாரிகள் செய்தனர்.

திருவனந்தபுரம் எல்.ஐ.ஸி.யைச் சேர்ந்த திரு நாகராஜனின் மாமனார் இறந்துவிட்டார். அந்த விவரத்தை அவர் தமது மனைவிக்குத் தெரிவிக்காமலேயே அவளுடன் மதுரைக்கு இந்த விமானத்தில் பயணப்பட்டார். உரிய சமயத்தில் அதிர்ச்சி அளிக்காத விதமாக மனைவிக்குத் துயர சம்பவத்தைச் சொல்லலாம் என்ற நினைப்பில் அழைத்து வந்திருக்கிறார். ஆனால் என்ன துரதிர்ஷ்டம்! நாகராஜனின் மனைவி, தன் தகப்பனார் காலமான விவரத்தைத் தெரிந்து கொள்ளாமலேயே இந்த விபத்தில் உயிர் துறக்க நேரிட்டது. திரு நாகராஜனுக்கோ பலத்த காயம். ஆபத்தான நிலையில் இருந்த அவர், தம் மனைவியின் கதி என்ன என்றே எல்லாரையும் கேட்டுக் கொண்டிருந்தார். ஆம், நீண்ட நேரத்துக்குப் பிறகே அவருக்குத் தம் மனைவி இவ் விபத்தில் இறந்துவிட்டார் எனத் தெரிய வந்தது.

இவர்களுடைய கதை இவ்வளவு பரிதாபம் என்றால் உயிர் துறந்த ஏர் ஹோஸ்டஸ் பரிமளாராவ் விஷயத்தில் விதி சதிசெய்து விட்டது என்பது நூற்றுக்கு நூறு பொருந்தும். ஏனெனில், இவர் வேறு ஒருவருக்குப் பதிலாக அன்று பணியாற்ற வந்தார். அவருக்கு அன்று டியூட்டி இல்லாதிருந்தும் கருணையற்ற காலன் தன் டியூட்டியைக் கச்சிதமாகச் செய்துவிட்டான்!

இந்தியன் ஏர்லைன்ஸ் ஹைதராபாத் கிளையைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் இருவர் மதுரையில் சுவாமி தரிசனம் செய்ய இவ் விமானத்தில் வந்து, இறைவனின் திருவடிகளையே சென்றடைந்து விட்டனர்!

இப்படி இன்னும் எத்தனையோ துயரக் கதைகள். மனைவியை இழந்த கணவன், பெற்றோரைப் பறிகொடுத்த குழந்தைகள், வாலிப வயதினரான மக்களைப் பிரிய நேர்ந்த பெற்றோர்கள் என சோகமயமான காட்சிகள்.

விபத்து நேர்ந்ததற்கான காரணங்களை ஆராயக் குழு அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அதுபற்றித் தற்போது நாம் ஏதும் கூறுவது உசிதமில்லை. துயருற்றவர்களுக்கு ஆறுதல் கூறவோ வார்த்தைகள் இல்லை! மரணமடைந்தவர்கள், படுகாயமுற்றவர்கள், உயிர் பிழைத்தும் சொல்லி முடியாத அதிர்ச்சிக்கு உள்ளானவர்கள் — ஆகிய அனைவருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

---

## சென்னைக்குப் புதிய ஷெரீப்



சென்னை தென்னிந்திய வர்த்தகச் சங்கத்தின் தலைவரும், விளையாட்டுக் கலைகளின் போஷகருமான **திரு எம். ஏ. எம். ராமசாமி** சென்னை நகரத்துக்கு டிஸம்பர் 20ந் தேதியிலிருந்து புதிய வருஷத்துக்கு ஷெரீப்பாக நியமிக்கப்பட்டிருக்கிறார். புதிய ஷெரீப்புக்கு நம் மகிழ்ச்சியையும் நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.





# புதிய நாடு உதயம்



படங்கள் : முப்படைப் பிரதம தளபதிகளான ஸ்ரீ நந்தா, ஸ்ரீ மானெக்ஷா, ஸ்ரீ லால்.

லெப்டினண்ட் ஜெனரல் ஜக்ஜித் சிங் அரோரா. லெப்டினண்ட் ஜெனரல் ஜே. எப். ஆர். ஜாகப்.





**ப**ங்களா தேஷ் விடுதலை பெற்று விட்டது. பாகிஸ்தானிய ராணுவத்தின் கொடுங்கோல் ஆட்சிக்கு முடிவு ஏற்பட்டு விட்டது. தர்மத்தின் இந்த வெற்றிக்கு உறுதுணையாக இருந்த அனைவரையும் வாழ்த்துகிறோம். நமது ராணுவம், கடற்படை, விமானப் படைகளைச் சேர்ந்த எல்லாரையும் பாராட்டு முகமாக இவ்விதழ் மேலட்டையில் முப்படைத் தளபதிகளான ஸ்ரீ மானெக்ஷா, ஸ்ரீ நந்தா, ஸ்ரீ லால் ஆகியோருடன் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா மகிழ்ச்சியுடன் அளவளாவும் காட்சியைப் பிரசுரித்திருக்கிறோம். சுதந்திர வங்க தேசத்துக்காகப் போராடிய முக்தி வாஹினிப் படையினரின் துணிவையும், அஞ்சா நெஞ்சத்தையும் போற்றுகிறோம்.

இப்போரில் வீர சொர்க்கம் அடைந்த அனைவருக்கும் நமது மரியாதைகளைத் தலை வணங்கிச் சமர்ப்பிக்கிறோம். அவர்களது குடும்பங்களுக்கு நமது இதயபூர்வமான அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

வங்க தேச விடுதலைக்குப் போராடிய பாரதப் படைக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்லும் பெருமையையும் பாகிஸ்தான் ராணுவத்தின் சரணாகதியை ஏற்கும் பெருமையையும் பெற்றவர் லெப்டினண்ட் ஜெனரல் ஸ்ரீ ஜே. எஸ். அரோரா. அவரது திறமையைக் கொண்டாடுகிறோம்.

அடுத்த பக்கங்களில் :

1. பங்களாதேஷிலிருந்து வந்த அகதிகள் பிரச்னையைச் சமாளிக்க வேண்டிய பெரும் பொறுப்பு இந்திய சர்க்கார் தலையில் விழுந்தது. அகதிகளுக்கு கேர் ஸ்தாபனத்தின் போஷாக்கு உணவு அளிக்கப்படுகிறது. 2. அகதிகள் முகாமுக்கு அமெரிக்கப் பிரமுகர் விஜயம். வைத்திய வசதி அளிக்கப்படுகிறது.















3. பங்களாதேஷில் பாகிஸ்தானிப் படையினர் முக்கியமான நாற்பது தலைவர்களை ஆலோசனைக்காக என்று வரவழைத்து, கைகளைக் கட்டி அருகிலுள்ள கால்வாய் அருகே சுட்டு வீழ்த்தினர். 4. பாகிஸ்தானி விமானம் ஜலந்தரிலுள்ள அலம்கிர் கிராமத்தில் குண்டு வீசிக் கிராமவாசிகளை அழித்தது. 5. அமெரிக்கப் பீரங்கியுடன்கூடிய பாகிஸ்தானி ஜீப்பைக்கைப்பற்றிய டோக்ரா ரெஜிமெண்ட் வீரர்கள் பூரிப்புடன் காணப்படுகின்றனர். 6. பங்களா தேஷ் முக்திவாஹினி வீரர்கள் நாட்டைக் காக்கும் பணியில் ஈடுபட்டுள்ளனர். 7. எல்லைப் புறத்தில் நம் இந்தியக் காவல்





படையினர். 8. மேற்கத்தியப் பிரிவில் ஷகர்கரில் உடைபட்ட பாகிஸ்தானி டாங்கி. 9. நவம்பர் 22-ல் பாகிஸ்தானி ஸாபர் விமானங்கள் மூன்று நம் நாட் விமானங்களால் சுட்டுவீழ்த்தப்பட்டன. பாக் விமானங்களுள் ஒன்று. 10. ராஜஸ்தான் பகுதியில் உடைத்து வீழ்த்திய பாக் டாங்கியின் மேல் இந்தியப் போர்வீரர்கள். 11. ஐ. என். எஸ். விக்ராந்தில் எதிரியைத் தாக்க விமானங்கள் புறப்படுகின்றன. 12. டெல்லி கண்டோன்மெண்டில் ராணுவ ஆஸ்பத்திரியில், வீரப்போர் புரிந்து அடிபட்ட அதிகாரிக்கு விமானப்படைத் தளபதி எம். எம். இன்ஜினியர் ஆறுதல் கூறுகிறார். 13. பங்களா தேச வெற்றிக்கு உறுதுணை செய்த நம் போர்ப் படைக் கப்பல்கள். 14. பங்களாதேசத்தில் ரஸாக்கர்கள்





இந்தியப் படையினரிடம் சரணகதி அடைகின்றனர். 15. இந்தியாவிலுள்ள அயல் நாட்டு ராணுவப் பிரதிநிதிகள் பங்களா தேஷுக்குச் சென்று உண்மை நிலைமையை நேரில் கண்டறிந்தனர். 16. இந்திய சிப்பாயைத் தூக்கி மகிழ்ந்து கொண்டாடும் பங்களா தேச மக்கள். 17. ஜெஸ்ஸாரில் இந்திய ராணுவத்தினருக்கு மக்கள் குதூகல வரவேற்பளிக்கின்றனர். 18. பங்களா தேஷில் பகுசீரா வீழ்ச்சிக்கும் பிறகு பங்களாதேஷ் மக்கள் லெப்டினண்ட் ஜென

















ரல் ஜக்ஜித் சிங் அரோராவுக்கு மகிழ்ச்சி ஆரவாரத்துடன் வர வேற்பு அளிக்கின்றனர். 19. பாகிஸ்தான் தளபதி லெப்டி னன்ட் ஜெனரல் நியாஸி டாக்காவில் சரணடைப் பத்திரத் தில் கையெழுத்திடுகிறார். அருகே வெற்றிவாகை சூடிய இந்தியப் படை தளபதிகள். 20. பங்களா தேஷின் தனிப்பெருந் தலைவர் முஜிபுர் ரெஹ்மான்.






# இந்து நல்வழி மன்றம்



## ஸ்ரீ காஞ்சி பெரியவர்கள் ஸ்ரீமுகம்

காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் சமீபத்தில் விடுத்துள்ள ஸ்ரீமுகத்தில் ஒவ்வோர் ஊரிலும் ''இந்து நல்வழி மன்றம்'' அமைக்குமாறு கேட்டுக் கொண்டுள்ளார்கள்.

மன்றம் பற்றி ஸ்ரீ ஸ்வாமிகள் கூறியிருப்பதாவது: இந்து நல்வழி மன்றம் ஊர்க் கோயிலுக்கு அருகிலேயே ஒரு கட்டிடத்தில் அமைய வேண்டும். அக் கட்டிடத்தை ஒரு தடுப்பு மூலமாக இரு பிரிவுகளாக்கி, ஒரு பிரிவின் நடுவில் தாயுமானவர் உருவம் நிறுத்தி, அதைச் சுற்றிப் பெரியபுராண நாயன்மார்களின் உருவங்களை அமைக்கலாம். அதுபோல மற்றொரு பகுதியில் நடுவில் ஆண்டாளின் உருவத்தை வைத்து அதைச் சுற்றிலும் ஆழ்வார்களின் உருவங்களை அமைக்க லாம். ஊர் மக்கள் இம்மன்றத்தில் ஒன்றுசேர்ந்து, பஜனை செய்தல் முதலிய நற்செயல்களில் ஈடுபட வேண்டும்.

மன்றத்தில் செய்ய வேண்டிய சமயப் பணிகளில் முக்கியமானவை:

ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் உள்ள மக்கள் 'இந்து நல்வழி மன்றம்' என்ற பெயரில் ஒரு மன்றத்தை அமைத்துக்கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு மன்றத்திலும் குறைந்தது பத்து அங்கத்தினர்களாவது இருக்க வேண்டும்.

இந்துக் குழந்தைகள் எல்லாரையும் மாலையில் தீபம் வைத்தவுடன் கோயிலுக்கு அழைத்துச் சென்று அரை மணி நேரத்துக்குக் குறையாமல் ஸ்தோத்திரப் பாடல்கள், பாரதம், ராமாயணம் சொல்லித் தர ஏற்பாடு செய்ய வேண்டும்.

நாள்தோறும் ஒவ்வொரு குடும்பத்திலும் சமையல் செய்ய அரிசி எடுக்கும் போது ஒரு பிடி அரிசியைத் தர்மத்துக்கென்று ஒரு பாத்திரத்தில் போட்டு வைத்து அந்த அரிசியை வாரம் ஒரு முறை சேகரம் செய்து அந்த ஊரிலுள்ள கோவிலில் சமையல் செய்து, பச்சரிசியாக இருந்தால் நிவேதனம் செய்தும் புழுங்கல் அரிசியாக இருந்தால் நிவேதனம் செய்யாமலும் ஏழைகளுக்கு வழங்க வேண்டும்.

ஊரில் உள்ள அரசாங்க ஆஸ்பத்திரி, நர்ஸிங்ஹோமில் உள்ள நோயாளிகளுக்கு வாரம் ஒருமுறையாவது கோயில்களிலிருந்து பகவத் பிரசாதம் கொண்டு போய் வழங்க வேண்டும்.

இந்து அநாதைப் பிணங்களை இந்து சம்பிரதாயப்படி அடக்கம் செய்ய அல்லது தகனம் செய்ய உதவி புரிய வேண்டும்.

ஊருக்கு அருகில் உள்ள சென்ட்ரல், சப்-ஜெயில் இவற்றில் அரசாங்க அநுமதி பெற்று, வாரம் ஒருமுறையாவது பஜனை, மதச் சொற்பொழிவு நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும்.

வசதியுள்ள ஒவ்வொரு வீட்டிலும் பழைய துணிகளைச் சேகரித்துச் சுத்தம் செய்து ஏழைகளுக்கு வழங்க வேண்டும்.

பள்ளி மாணவர்களை 'முருகா சரணம், வேங்கடேசா சரணம், ஐயப்பா சரணம்' என ஐந்நூறுக்குக் குறையாமல் எழுதச் சொல்லி டாலர் வழங்கவேண்டும்.

ஊரில் ஜனங்கள் கூடும்படியான சினிமாக் கொட்டகை முன்போ, கடைவீதியின் முகப்பிலோ, தெரு முகப்பிலோ ஒரு போர்டில் மேல் பாகம் முருகன் வேங்கடாசலபதி படம் எழுதி, அதன் கீழ் ''புனிதமான மனித ஜன்மம் எடுத்த அன்பர்களே, ஆயிரக் கணக்கான ஜனங்கள் இவரை வழிபட்டுப் பிரார்த்தனை செய்து, ஆனந்தமாகவும் துன்பம் நீங்கியும் வாழ்கிறார்கள். ஆகையால் புனிதமான மனிதப் பிறவி எடுத்த நீங்கள் எல்லாரும் இந்தப் பகவானிடம் நம்பிக்கையும், விசுவாசமும் வைத்து, உங்கள் பிரார்த்தனையைப் பகவானிடம் செலுத்திச் சந்தோஷமடைவீர்களாக'' என்று எழுதி வைக்க வேண்டும்.

ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று வேங்கடாசலபதி, முருகன், ஐயப்பன் முதலிய படங்கள், டாலர்கள் கொடுக்க வேண்டும்.

பள்ளி மாணவர்களுக்கு நீதி போதனை, தோத்திரப் புத்தகம் கொடுத்து அவற்றை மனப்பாடம் செய்து ஒப்பிப்பவர்களுக்குப் பரிசுகள் வழங்க வேண்டும்.



# அம்மா



ரா. கணபதி

## 12. சாரதையும் எதிர்த்தாள்; ராமகிருஷ்ணரும் சினந்தார்!

எந்த தேவி எல்லா உயிர்களுக்குள்ளும்
தாய்மையாகத் திகழ்கிறாளோ, அந்த
தேவிக்கு வந்தனம், வந்தனம்,
மீண்டும் வந்தனம் - தேவி மாகாத்மியம்

ஆலகால வெள்ளம் திடுமென வற்றி அமிருதம் குமுகுமுவெனப் பெருகத் தொடங்கியது போல் ராமகிருஷ்ணர் தண்ணென்று பேசலானார்.

"என் தேவி, குரு தேவி! நீங்க பண்ணின போதனையாலேதாம்மா எனக்கு இப்ப பேசாம இருக்கிற ஞானம் வந்திருக்கு" என்று விநயத்துடன் சொன்னார் ராமகிருஷ்ணர். தொடர்ந்து "இந்த உலக மாயத்தை விட்டு உயர ஏறணும்னு ஆசைப்பட்டேன். அம்பாள் உங்களை எங்கிட்டே அனுப்பி வைச்சா. கீழே இருந்த என்னை மாடி, மாடியா நீங்க கஷ்டப்பட்டு ஏத்தி உச்சிக்குக் கொண்டு போய் விட்டேள். உங்களாலேதான் எனக்கு மகா அநுபவங்கள் கிடைச்சுது. அந்த ஞான உச்சிலேருந்து கீழே இருக்கிற மாய தளங்களைப் பார்க்கறேன். அதென்ன அதிசயமம்மா? அப்படிப் பார்க்கச்சே என்ன தெரியறது தெரியுமோ? ஞான உச்சிக்கு எந்த மண்ணையும், செங்கல்லையும், காரையையும் சேர்த்துத் தரை பாவியிருக்கோ, கைப்பிடி போட்டிருக்கோ — சாட்சாத் அதே மண், செங்கல், காரையை எல்லாம் சேர்த்துத்தான் கீழ்த் தளங்களையும் கட்டியிருக்குன்னு தெரியறது. மாயாலோகத்துலே யாரைப் பாத்தாலும், எதைக் கேட்டாலும், எதை மோந்தாலும், — கீரை வேகிற ஓசையைக் கேட்டாலும், மண் வாசனையை மோந்தாலும், ஸ்ரீநிவாஸோட பணிவைப் பார்த்தாலும், உங்களோட கஷ்டத்தை நினைச்சாலும் — எங்க ஞானம்பாளோடே ஸ்வரூபத்தையேதான் பல தினுசலே அநுபவிக்கிறப்பலே இருக்கு. நான் என்ன சொல்லக் கிடக்கு? அம்பாளே சொல்றதை எல்லாம் சொல்லட்டும்னு விட்டுட்டு இருக்கேன். அவளுக்குன்னு ஒரு பாஷை, ஒரு சொல் உண்டு. நான் சத்தம் போடாம பேசாமல் இருந்தாத்தான் அந்த மௌன பாஷை எனக்குக் கேக்கறது. தேவி, குரு மாதாவே, நீங்க என்னைப் பேசச் சொல்றேளே! நான் பேசி என்ன சாதிக்க முடியும்? நீங்களும் நம்ம அம்மாவைப் பேசச் சொல்லிக் கேளுங்களேன். ஆனா அவளோட ரகசியக் குரலைக் கேக்கணும்னா நாம மௌனமானாத்தான் முடியும்..."

பரமஹம்ஸமாகப் பரவசத்தில் பறந்தார் அவர்.

பைரவியின் கண்கள் தாரை தாரையாக வருஷித்தன.

'இவன் அவதார புருஷன். இவனுக்கு நான் குரு என்பது பெயருக்குத்தான். ஸ்ரீராமன் வசிஷ்டரிடத்திலும், ஸ்ரீ கிருஷ்ணன் ஸாந்தீபனியிடத்திலும் உலக ரீதியைக் காட்டுவதற்கே குருகுலம் வாசம் செய்தது போல், இவன் என்னை நிமித்த மாத்திரம் குருவாகக் கொண்டான். என்றால் ஏன் வசிஷ்டரைப் போலவும், ஸாந்தீபனியைப்போலவும் ஞான நிலை சலியாது இருக்க முடியவில்லை?' — பைரவி தன்னையே கேட்டுக்கொண்டாள்.

இந்தத் தொடரில் பைரவியின் பூர்வப் பெருமைகளை நாம் பார்க்கவில்லை. உண்மையில் அவள் மிகப் பெரியவள். யோக சாஸ்திரத்தையும் தந்திர மந்திர சாஸ்திரத்தையும் ஏட்டளவில் கரைத்துக் குடித்தது மட்டுமின்றி, நடைமுறையில் அப்பியசித்து உன்னத நிலைகளை எய்தியவள்.

ஒரு காலத்தில் அவள் பக்தி புரிந்து கரைந்தவள்தான். ஆயினும் வித்யா கர்வத்தில் அகந்தை உண்டாகி, அகந்தையிலிருந்து 'இது என்னுடையது' என்று அதிகாரமாக உரிமை காட்டும் போக்கும் பிராம்மணியிடம் வலுத்தது. ஆதியில் கர்வமற்ற பக்தி அவளுக்கு ராமகிருஷ்ணரின் அவதார விசேஷத்தைக் காட்டிக் கொடுத்தது. கர்வம் வந்த பின் சாரதையின் அவதார மகிமை அவளுக்குக் கிரகிக்க முடியாத ஒன்றாக ஆகிவிட்டது. ஏன், முன்பு அவள் உணர்ந்திருந்த ராமகிருஷ்ண மகி

மையைக்கூட இருமாப்பு என்ற இரும்புத் திரை அவளது பார்வையிலிருந்து மறைத்து விட்டது.

ராமகிருஷ்ணர் சொன்னது போல் சங்கிலித் தொடராக ஆணவம் படர்ந்து பல ரூபங்கள் கொண்டது. கடைசியில் ஸ்ரீநிவாஸ சாங்காரியின் இலையை எடுக்க முற்பட்டபோது ஆணவமே அதிவிநயமாக வேஷம் போட்டது தான் அதிசயம்!

கீதாசாரியன் சொன்ன சங்கிலித் தொடரை அப்படியே மெய்ப்பித்தது பைரவியின் போக்கு. ''ஒன்றிடம் நெருக்கம் கொண்டால் அதனிடம் பற்று உண்டாகும். அப்புறம், அந்தப் பற்றுக் குப் பங்கம் விளைவிப்பதாகத் தோன்றுவதிலெல்லாம் சினம் உண்டாகும். சினத்தின் விளைவு: மனம் மயங்கத் தொடங்குகிறது. மன மயக்கத்தின் விளைவாக எண்ணங்கள் கெடுகின்றன. இதன் விளைவு: எண்ணங்களைச் சீர்தூக்கி முடிவு செய்யவேண்டிய புத்தியே பாழாகத் தொடங்குகிறது. அதற்கப்புறம்? மனிதன் நாசமாக வேண்டியதுதான்'' என்றான் கண்ணன். அதே கண்ணன் இன்னொன்றும் சொன்னான்: ''என் பக்தன் ஒருகாலும் நாசமடைவதில்லை'' என்றான்.

பைரவி பிராம்மணி நாசத்தின் ஒட்டு விளிம்பு வரை வந்துவிட்டாள். அப்புறம் அதள பாதாளம்தான். ஆனால் அவள் பூர்வத்தில் பக்தி செய்தவளல்லவா? எனவே அவள் நசித்துப் போகாதபடி அந்த மயிரிழையிலே ராமகிருஷ்ணர் வந்து நின்று அவளைக் காப்பாற்றினார்.

தன்னை நாகமாக வர்ணித்துக் கொண்ட யோகேசுவரி, இப்போது மந்திரத்தில் கட்டுண்ட சர்ப்பம் போல ராமகிருஷ்ணரின் வாக்கில் அப்படியே ஸ்தம்பித்து அமர்ந்தாள். சித்தத்தைப் பிசிரே இல்லாமல் ஒருமுகமாக்கி



யோகங்கள் புரிந்த அந்த மகா வியக்தி இப்போது சிலையாக அமர்ந்தாள். அடுக்கடுக்காகப் பிரிகிற மலர் போல அவள் செய்த சகல காரியங்களும் அவ ளுக்குள் மடலவிழ்ந்தன. தான் செய்த தவறுகள் அனைத்தையும் உணர்ந்தாள். புனித ராமகிருஷ்ணருக்குத் தான் விதித்த கட்டுப்பாடுகள் எவ்வளவு மூடத்தனமானவை என்றுஉணர்ந்தாள். தான் எரிந்து விழுந்தபோதிலும் குளிரக் குளிரத் தனக்குப் பணிவிடை செய்த சாருவுக்குத் தான் செய்த பொல்லாங் குகள் அவளுடைய நெஞ்சைச் சுட்டன. ஞானிகளுக்கும், தாங்கள் ஞானி என்ற அகந்தை தோன்றுமிடத்து மகா மாயா தேவி அவர்களை மயக்கி மோகத்தில் ஆழ்த்தி விடுவாள் என்ற சண்டி வாக் கியத்தை எண்ணி உளம் உருகினள். தன்னை மயக்கியதோடு நில்லாமல் மயக்கம் தீர்த்தும் வைத்தாளே என்று எல்லையில்லாத நன்றி கொண்டாள்.

> உள்ளத்திலே கர்வம் கொண்ட போதினில்
> ஓங்கி அடித்திடுவான்

என்பதை முதலில் இறைவன் நிரூபித் தான். பிறகு,

> ஆபத்திலே வந்து பக்கத்திலே நின்று
> அதனை விலக்கிடுவான்

என்பதையும் செய்து காட்டி, பைரவி யைக் காத்தருளினன்.

எச்சில் இலையை சாங்காரியே எடுத் துப் போட்டுச் சுத்தம் செய்தார். பைரவியின் உள்ளிருந்தும் எச்சில் இலை எடுத்தெறியப்பட்டுச் சுத்தமாயிற்று.

**பை**ரவி பிராம்மணி ஆழ்ந்த பக்தி யுடனும் பணிவுடனும் அற்புதமான மாலை ஒன்றினைத் தொடுத்தாள். அதன் நறுமணம் அவளுக்குப் போதவில்லை. சந்தனக் குழம்பை அதன்மீது தெளித் தாள். செந்தணலாக இருந்த அவளது உள்ளமும் சந்தனமாகியிருந்தது!

அந்த அழகிய மலர் மாலையை ராம கிருஷ்ணருக்குச் சூட்டினள். அவரது கமல பாதங்களில் இரு கமல மலர்களை வைத்தாள். முன்பு சிஷ்யரா யிருந்த அவர் இப்போது பகவானகவே இருந்து அதை ஏற்றுக் கொண்டார்.

''அப்பனே! என்னை மன்னித்துவிடு'' என்று அகம் குழைந்து வேண்டிக்கொண் டாள், தனது கமலக் கண்களிலிருந்து தேன் துளிகளைப் பொழிந்தவாறு.

''அம்மா, யாரை யார் மன்னிக் கிறது? இதெல்லாம் அம்மாவோட லீலைதானே! உங்களை இப்படி ஆட்டம் போட வெச்சு, அதிலேருந்து சாருவுக்கு வினயத்தை ஆணி அடிச்சாப்பலே போதிச்சிருப்பா. நீங்க என் குரு... அதுக்கு மேலே எங்கிட்ட உள்ளன்பு வெச்சவா; பெற்ற தாய்க்கு மேலே. 'மன்னிப்பு'ங்கற வார்த்தையைச் சொல் லப்படுமோ?'' என்றார்.

''மன்னிப்புக் கேட்க வேண்டியது என் தர்மம் இல்லையா? உன்னை மட்டு மில்லை, அந்த இளம் நுங்கு இருக்கே— சாரு, சாருன்னு பேர் வெச்சண்டு! அந் தப் பரிசுத்த பிரேமாத்மாவின் காலிலே விழுந்து கதறி மன்னிப்புக் கேக்கணும். ஆனு நான் மன்னிப்புக் கேட்டா, அந்தப் பெண் பிராணனையே விட்டுடும். அந்தக் குழந்தையோட அன்பும் எளிமையும் அப்படிப்பட்டது. அவ காலிலே வெக்கறதா நினைச்சுத்தான் இந்த இரண்டு தாமரைப் பூவை உன் பாதத்திலே வெச்சேன்'' என்று நாத் தழுதழுக்கக் கூறினள் பைரவி.

''பைரவி தேவீ! இப்படியெல்லாம் பேசாதேள். சாரு உங்க மாட்டுப் பெண். அவகிட்ட என்ன மன்னிப்பு வேண்டிக்கிடக்கு? உரிமையோட, ஸ்வா தீனப் பிரியத்தோடே அவளைக் கூப் பிடுங்கோ! 'உன் அகமுடையானுக்குப் புஷ்ப ஹாரம் போட்டிருக்கேன்; அப் படியே கிருஷ்ண சைதன்யர் மாதிரி இருக்கான் வந்து பாரு'ன்னு அழைச் சுண்டு வாங்கோ!'' என்றார் ராமகிருஷ் ணர் ஓரளவு பாவ சமாதியிலே.

எவ்வளவோ முறை அதிகாரத்தில் ஓங்கி எழுந்து அவ்வீட்டை நிரப்பியிருக் கும் பைரவியின் குரல் இப்போது முதல் முறையாகவும், கடைசி முறையாகவும் அன்பிலே ஓங்கி ஒலித்தது. ''அம்மா, சாரதே! செல்ல மாட்டுப் பொண்ணே! இங்கே ஓடிவா! உன் அகமுடையான் கிருஷ்ண சைதன்யமா ஜொலிக்கிறன், வந்து பாரு'' என்று ஆரவாரமிட்டாள்.

இலை மறைவு காய் மறைவாகவே புருஷனைப் பார்த்துள்ள சாரு, இப் போது ஒரு பெரிய மநுஷியின் முன் ஞல் நேருக்கு நேராகக் கணவரைப் பார்க்க லஜ்ஜை கொண்டாள்.

ஆனல் பைரவி விடவில்லை. அந்தக் கோமளக் கொடியை அள்ளிப் பிடித் துக்கொண்டு வந்து, அன்பு விருட்சத் தின் எதிரே நிறுத்தினள்.

ராமகிருஷ்ணரின் நயனங்கள் சமாதி நிலையில் சொருகிக் கொண்டிருந்தன. தேகத்திலிருந்து கருணைக் கிரணங்கள் பிரவகித்துக் கொண்டிருந்தன.

அந்த உன்னதம் ஒருபுறம், பைரவி யின் புதிய அன்பு எழுச்சி ஒருபுறம், அதன் பிரதியாகத் தன்னிடமே உதித்த நிறைவின் அழுத்தம் ஒருபுறம், இயல் பான நாணம் ஒரு புறம் என்று நான்கு

# பாதுகாப்பான பூச்சு



# நன்றி—நீடித்த டூலக்ஸுக்கு

## டூலக்ஸ் ஒருபொழுதும் திட்டுத்திட்டாகவும் உரிந்தும் போகாது. நீடித்திருக்கும் பரப்பு— முற்றிலும் ஒரே சீராக இருக்கும்.

உங்கள் வீட்டிலும் நீடித்திருக்கின்ற டூலக்ஸ் பெயின்ட் பூசியிருக்கிறீர்களா? அதன் செலவு, நீங்கள் நினைப்பதைவிட குறைவுதான்.

★ **பரந்த பரப்பிற்கு பூசக்கூடியது:** டூலக்ஸை குறைவாக உபயோகித்து அப்பழுக்கில்லாமல் விரிவாக பரந்த இடத்திற்குப் பூசமுடியும்—குறைந்த அளவே தேவைப்படுகிறது; செலவும் குறைவாகிறது.

★ **பூரணமாகக் கழுவக்கூடியது:** சோப்புநீர் கொண்டு கறைகள், தூசு அழுக்கு ஆகிய வற்றை சுலபமாகக் கழுவிவிடலாம்.

★ **மங்காத, உரிந்துபோகாத முற்றிலும் ஒரே சீரான பரப்பு:** தரப்பரிசோதனை செய்யப்பட்ட கூட்டுப் பொருள்களினாலானது டூலக்ஸ்.

**தேர்ந்தெடுக்க 121 வண்ணஜாலம்:** உங்களுக்கு உகந்தது எந்த நிறம் என்று நீங்கள் எப்பொழுதாவது எண்ணியதுண்டா? தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள அநேகவித நிறங்களுள் உங்கள் வீடு அழகுடன் திகழ்வதற்கு உள்ளம் உற்சாகமூட்டும் எண்ணிறந்த நிறத் திட்டங்கள் இருக்கின்றன. உங்கள் கன்ட்ராக்டருடன் கலந்துபேசி அவரது ஆலோசனையைக்கேட்டு டூலக்ஸ் நிறவகை அட்டையைப் பாருங்கள்.




டூலக்ஸ்—இந்தியாவில் தயாரிப்பாளர்களும் விற்பனையாளர்களும்:
தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்.

ACCI/(T) 6669

டூலக்ஸ்—இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், லண்டனின் டிரேட் மார்க்.
பதிவுபெற்று உபயோகிப்பவர்கள்: தி ஆல்கலி அண்டு கெமிகல் கோர்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்.

திசைகளிலும் நான்கு சக்திகள் சாரதையை மோத்தி மோதின.

''அகத்துக்காரர் எப்படி இருக்கிறார்?'' என்று பட்டாபிராமனைக் காட்டி சீதா தேவியிடம் கௌசல்யை எப்படிக் கேட்டிருப்பாளோ, அப்படிக் கேட்டாள் பிராம்மணி.

சாரதை திக்கு முக்காடினாள். ''நன்னா'' என்ற ஒரே வார்த்தையைச் சொன்னாள். ஒரு விநாடிதான் அங்கு நின்றாள். உள்ளே ஓடி மறைந்தாள்.

பைரவியும் வெளியேறினாள். அதோடு சாரதையின் சரித்திரத்திலிருந்தே வெளியேறி மறைந்தாள்.

மறைந்துதான் விட்டாளா? அவளது ஆணவமும், அதை வென்ற அன்பும், அவள் செய்த சிறுமைகளும், அந்தச் சிறுமைகளை உணர்ந்த அவளது பெருமையும் சாரதாவின் சரித்திரத்தில் மறையாத சுவடுகளைப் பதித்து விட்டனவே! மாறுபட்ட குணங்களைக் கொண்ட பாத்திரங்களை அருகருகே காட்டி வருணிப்பதில் (Study in contrast) கதாசிரியர்கள் மகிழுவர். தேவி பராசக்தி இப்படிப்பட்ட சுவையான கதையை பிராம்மணி, சாரதை இவர்களைச் சேர்த்துக் காட்டிப் புனைந்திருக்கிறாள்!

"இதென்ன மாமா, தாமரைப் பூ! உங்களுக்கு மாலை போட்டதோடு நில்லாமல் பைரவி அர்ச்சனை வேறு பண்ணினாளா?'' என்று கேட்டார் ஹ்ருதயர். பைரவி போனதிலே அவருக்கு உள்ளூறப் பரம திருப்தி. தான் விரட்டி அவள் போகாமல், தானாகவே பக்குவமாக வெளியேறி நல்ல பெயர் வாங்கிக் கொண்டதில் சிறிது வருத்தமும்கூட.

ராமகிருஷ்ணர் அதற்கொன்றும் பதில் சொல்லாமல், ''ஹ்ருதே! ஏழு வருஷத்துக்கு முன்னாடி நாம் ஜயராம்பாடி போனோமே, அப்போ வழியிலே நீ தாமரைப் பூப் பறிச்சுண்டு வந்தியே, அதை என்ன பண்ணினே!'' என்றார்.

அதுகாறும் சொல்லாதிருந்த இரகசியத்தை ஹ்ருதயர் அவிழ்த்துச் சொன்னார்: ''சின்ன மாமியோட பாதத்திலே வெச்சு வணங்கினேன்.''

ராமகிருஷ்ணர் மந்தஹாச முகத்தவராக யோசனையில் ஆழ்ந்தாற்போலிருந்தார். ''ஓகோ, அவளை நமஸ்காரம் பண்ணணும்னு சொன்னே. அவ நடுங்கிண்டு உள்ளே ஓடினா. நீ துரத்திண்டே போனியே, அப்போ தாமரைப் பூவாலே அவளுக்கு அர்ச்சனை பண்ணினாயாக்கும்!'' என்றார்.

ஹ்ருதயர் வெட்கத்தில் குவிந்த தலையுடன் 'ஆமாம்' போட்டார்.

சாரதையிடம் பைரவி இறுதியாக விடைபெறும்போது இருதய கமலத்தையே அர்ப்பணித்துப் போனாள். ஹ்ருதயரோ தொடக்கத்திலேயே கமலத்தைச் சாதாரணப் பூவாக நினைத்து அர்ப்பணித்தார். இவர் இனி என்னென்ன செய்யப் போகிறாரோ?

சின்ன மாமி பாடம் படிப்பதே ஹ்ருதயருக்குப் பிடிக்கவில்லை. பைரவி இருந்த வரையில் பேசாதிருந்த ஹ்ருதயர் இப்போது மாமியிடம் தமக்குள்ள பொறாமை வெளிப்படாமலே நாசூக்காக பல முறை ஆட்சேபக் குரல் எழுப்பினார். ராமகிருஷ்ணர் சிரித்தே மழுப்பினார்.

ஒரு நாள் மாமாவும் மருமானும் போஜனம் செய்து கொண்டிருந்தனர். ராமகிருஷ்ணர் சிரிக்கச் சிரிக்கப் பேசிக் கொண்டே உண்டார். மதனியின் சமையற் திறனுக்குச் சபாஷ் கொடுத்துக் கொண்டும், மனைவியின் சமையலைக் கேலி செய்து கொண்டும் உண்டார். மதனி பக்குவம் செய்திருந்த உணவு வகைகளை உண்ணும் போது, ''ஆங்! இது வைத்ய ராமதாஸ் சரக்கு'' என்பார். சாரதை தயாரித்த வியஞ்சனங்களை உண்கையில், ''இது ஸ்ரீ நாத் ஸேன் சரக்கு'' என்பார்.

ராமதாஸ் என்பவர் மருத்துவத் துறை ஸ்பெஷலிஸ்ட். ஸ்ரீ நாத்ஸேன் ஒரு கற்றுக்குட்டி வைத்தியர்.

உடனே ஹ்ருதயர் மாமியிடம் தம் பரிவைக் காட்டுமுகமாக, ''அது சரி, ஆனால் ஸ்ரீநாத் ஸேன் நாம் கூப்பிட்ட குரலுக்கெல்லாம் கிடைப்பார். சின்னதுகளுக்கை வழிச்சுவிடக் கூட அவர் காத்திண்டிருக்கார்; வைத்ய ராமதாஸை நம்மாலே சமாளிக்க முடியுமா? உங்க சுகருஷைக்கு இந்தக் கத்துக்குட்டி எப்பவும் சித்தமாயிருக்கே'' என்றார்.

''ஆமாம், ஆமாம், **இவ எப்பவுமே கூட இருக்கா**'' என்று அழுத்தம் திருத்தமாக, சுவைத்துச் சொன்னார் ராமகிருஷ்ணர் — மதனியின் சமையலை விடவும் சுவைத்துக் கொண்டு!

ஹ்ருதயர் ஏதோ ஓர் இனிப்பைத்தான் உண்டார்; இருப்பினும் அவர் முகம் கசந்து வழிந்தது.

ராமகிருஷ்ணர் வீட்டிலில்லாதபோது தம் 'சொருபத்தை'ச் சிறிது கலைக்கலானார் ஹ்ருதயர்.



''எழுத்தறிவு இருந்தாத்தான் ராமாயணம், தேவீ மாஹாத்மியம் படிக்கலாம்னு மாமா சொல்கிறார். ஆனா, இந்த நாளுலே கன்னாபின்னான்னு நாவல், நாடகம்னுட்டு எழுத ஆரம்பிச்சிருக்கா! அதையெல்லாமும் படிக்க ஆரம்பிச்சுடுவேள். போறும் இந்தப் படிப்பு. நான் மாமாகிட்ட சொல்லி ஜயிக்க முடியல்லே. நீங்கதான் சொல்லணும்'' என்றார் சாரதையிடம்.

'நான் படிப்பை எப்படிப் பயன் செய்து கொள்ளப்போகிறேன் என்பதை **அவர்** அறிவதுபோல், ஹ்ருதயர் அறிய முடியுமா? இவர் வார்த்தையை எப்படிக் கேட்பது?' என்று கலங்கினாள் சாரதா.

குழந்தை லக்ஷ்மியோ ஹ்ருதயரிடம் ''அத்தான்! நீ சும்மாயிரேன். சித்தப்பா வரத்துக்குள்ளே நானும் சித்தியும் இந்தப் பாடத்தைப் படிச்சுடணும்னு இருக்கோம். நீ இடைஞ்சல் பண்ணாமே இரு'' என்று அடித்துக் கூறினாள்.

'சின்னாண்டு மாமி'யின் எதிரில் அந்த முந்திரிக் கொட்டை தன்னைத் தாக்கியதில் ஹ்ருதயர் தம்வசம் இழந்து விட்டார். உள்ளத்தில் பம்மியிருந்த பொறுமை விம்மி வெளி வந்தது.

மரியாதை முறைகளை அடியோடு மறந்து சாரதையிடமிருந்த புத்தகத்தை அப்படியே பிடுங்கி எறிந்தார்.

லக்ஷ்மியின் புத்தகத்தையும் பிடுங்கப் போனார். ''எங்கிட்டே வந்தியோ, தெரியும் சேதி'' என்று லக்ஷ்மி கூச்ச லிட்டாள்.

ஆனைப்பட்ட பைரவியையே ஆட்டி வைத்த ஹ்ருதயரும் அஞ்சி நிற்கவேண்டியதாயிற்று.

ராமகிருஷ்ணர் வந்தார்.

அவரிடம் சாரதை எதுவும் சொல்லவில்லை. மன்னிப்பும், புறங் கூறாமையும் சாரதைக்கு எலும்பையும், சதையையும் விட நெருங்கிய இயற்கை அங்கங்கள்!

ஆனால் மறுநாளிலிருந்து பண்டாரி வரவில்லை. வீட்டில் நிம்மதியாகப் படிக்க முடியாது என்பதால் லக்ஷ்மி பள்ளிக்குப் போகத் தொடங்கினாள்.

பள்ளியிலிருந்து திரும்பி வந்து, அன்றன்று நடந்த பாடத்தைச் சித்திக்குச் சொல்லிக் கொடுப்பாள்.

பண்டாரியை நிறுத்த முடிந்தது, ஹ்ருதயரால். ராமகிருஷ்ணர் பாடம் போதிப்பதை யாரே நிறுத்த முடியும்?

ஆனால் இரண்டு கட்டங்களில் ராமகிருஷ்ணரே பாடத்தை நிறுத்திவிட்டு, மலைத்து நிற்குமாறு செய்தாள் எளிய சாரதாமணி!

**சா**ரதை நெல் குத்திப் புடைத்துக் கொண்டும் சலித்துக் கொண்டும் இருந்தாள். பாலகிருஷ்ணன் குளம்புப் புழுதியிலேயே திளைத்துத் தனியழகு கொண்டிருந்ததுபோல், உமியும் தவிடும் அபிஷேகித்த சாரதையும் தனியழகுடன் பொலிந்தாள்.

ராமகிருஷ்ணர் வந்தார். ''இந்தச் சல்லடை நல்லதை யெல்லாம் கீழே விட்டுட்டு, கல்லையும் கட்டியையும் பிடிச்சு வெச்சுக்கிறது. முறம் கல்லைத் தூக்கி எறிஞ்சுட்டு நல்லதை மட்டும் தன்கிட்ட வெச்சுக்கிறது. சிலபேர் சத்சங்கத்தை உதறி விட்டுச் சல்லடையா யிருப்பா. சில பேர் அசத் சங்கத்தை உதறிவிட்டு முறமாயிருப்பா. நீ முறமாயிருக்கணும்'' என்றார்.

சாரதை அவரை ஒரு கணம் நேருக்கு நேராகப் பார்த்தாள். அதிலே ஓர் எதிர்ப்பு, ஓர் உறுதி — அதே சமயத்தில் மன்னிப்புக் கோரும் பாவனை, ஆயினும் எதிர்ப்பைவிட மாட்டேன் என்கிற சங்கற்பம் அனைத்தும் மிளிர்ந்தன.

அடுத்த கணமே கண்ணைத் தாழ்த்திக்கொண்டாள்.

''என்ன அப்படிப் பார்த்தே! நான் சொல்றது உனக்கு ஏற்கலே போலேயிருக்கு. அதற்காகப் பரிதாபமாக மன்னிப்பும் கேட்கிறே. ஆனாலும் 'நான் இப்படித்தான் இருப்பேன்'னும் சொல்றாப்பலே இருக்கு. என்ன சமாசாரம், ஊம்!'' என்றார் ராமகிருஷ்ணர்.

சாரதை தட்டுத் தடுமாறிப் பதில் சொன்னாள்: ''என்னாலே... என்னாலே... நல்லவா, கெட்டவான்னு... பிரிச்சு வெக்க.... பிரிச்சு வெக்க.... ஆமாம்... முடியாது...ஆமான்னா...என்னாலே முடியல்லே...குழந்தை அழுக்கிலே...விழுந்துடுத்துன்னா போய் அதைத் தூக்காம...தூக்காம...?''

சாரதை அழுது விடுவாள் போல் கழுத்துத் தசைநார்கள் கனத்தன. பேச்சுப் பொங்கி வந்தது.

ராமகிருஷ்ணர் மலைக்காமல், பிரமிக்காமல் என்ன செய்ய முடியும்?

தான் ராமகிருஷ்ணரிடம் கற்றதையெல்லாம் தேவி பிற்காலத்தில் பெரிது படுத்தி வர்ணித்ததில்லை. ஆனால் ஆயுள் முழுவதும் தான் கற்காத ஒரு பாடத்தை இறுமாப்பே இல்லாமல் சொல்வாள்: ''குழந்தை நாளிலிருந்து



நான் யார்கிட்டேயும் இருக்கிற குற்றத்தைப் பொருட்படுத்தினதே இல்லே. என் ஜன்மாயுசில் நான் கத்துக்காத பாடம் அதுதான்'' என்பாள்.

பிறர் தவறு அவளுக்குத் தெரியாமலில்லே. திருத்த முடிந்தவர்களைத் திருத்தினுள். பரம இதமாகத் தவற்றை உணர்த்தித் திருத்தினுள். ஆனால் ஒருவர் தவறு செய்கிறார் என்பதால் அவரிடம் அவளது அன்பில் குறைவு ஏற்பட்டதே யில்லே.

ராமகிருஷ்ணர் தம்மாலும் அவளுக்கு ஒரு பாடம் போதிக்க முடியவில்லே என்பதில் பூரித்தார்.

அவரால் இன்னொரு பாடமும் போதிக்க முடியாமல் போயிற்று.

லாஹா வீட்டு வேலேக்காரி ஏதோ காரியமாக ராமகிருஷ்ணரின் இல்லத்துக்கு வந்து போனுள். அவள் இடுப்பில் லாஹா வீட்டுக் குழந்தை ஒன்று; அவள் கையைப் பிடித்துக் கொண்டும் அதே வீட்டுக் குழந்தை இன்னென்று. 'ராசா, ராசா' என்று அந்தக் குழந்தைகளே அவள் அருமைக்கிட்டாள்.

ராமகிருஷ்ணா சாரதையிடம் சொன்னார்: ''இந்தக் குழந்தைகள் கிட்ட அந்த வேலேக்காரி எவ்வளவு ஒட்டுதலாயிருக்கா? அதுகளுக்காக எத்தனேயோ வேலே செய்யறு. இருந்தாலும் உள்ளுக்குள்ளே 'இதுகள் என் குழந்தைகள் இல்லே; நான் தாதிதான்'னு அவளுக்கு நன்னுத் தெரியுமோ இல்லியோ? நாமும் இந்த லோகத்திலே அப்படித்தான் இருக்கணும். 'என்னமோ இந்த மனுஷாளுக்கு மத்தியிலே வேலே செய்யறோம். இருந்தாலும் இவா நம்மவாள் இல்லே. அம்பாள் ஒருத்திதான் நம்மவள்'னு நினேச்சுண்டு இருக்கணும்... என்ன அப்படிப் புதிராப் பார்க்கறே... சரி, சரி. அன்னிக்கு மாதிரி இதுவும் உனக்கு ஏற்கலே....ம்...அப்படித்தானே?''

''இவா என்னுடையவா இல்லேனு யாரை எப்படித் தள்ளறது? தாதியும் யஜமான் வீட்டுக் குழந்தையும் மாதிரியா?... இல்லே... இல்லவே இல்லே... சொந்த அம்மா, சொந்தக் குழந்தைதான்'' என்று குமுறினுள் சாரதை.

'அம்மா குழந்தை' என்றவுடன் அவள் உள்ளம் குழைந்து விட்டது. உள்ளே குமைந்த குழந்தை ஆசை குமுறிக் கொண்டு கண்ணீராக வந்தது.

''என்னம்மா இப்படி அசடாட்டமா அழறே?'' என்று ராமகிருஷ்ணர் பதறிக் கேட்டார். ''அம்மாவாவது, குழந்தையாவது? அம்பாள் ஒருத்திதான் அம்மா. நாமெல்லாம் குழந்தை. நீ ஏன் வேறே ஏதோ அம்மா — குழந்தையைப் பற்றி நினேக்கிறே. ஊஹூம்! உனக்கு இந்த எண்ணம் வரவேபடாது. கொஞ்சம் கொஞ்சமா அது உன்னே இழுத்துண்டு போகும். நீ என்னே இழுக்கப் பார்ப்பே! ஊஹூம், ஊஹூம்!'' தலேயைக் குலுக்கி விட்டுக் கொண்டார், ராமகிருஷ்ணர். ''உனக்கு அம்மாவாகணும்னு ஆசையிருந்தா உங்காத்திலே நடந்த துக்க சம்பவத்தை யெல்லாம் உடனுக்குடனே நெனேச்சுக்கோ. நீ கொஞ்சி விளேயாடின குழந்தைகள் சவமாகி உன்னேப் பயமுறுத்தினதை நெனேச்சுக்கோ'' என்றார்.

இருவரது இதய ஆழம் வரையில் இந்தச் சம்பவம் பாய்ந்து விட்டது.

மறுநாள் காலே.

சாரதை வாசலில் சாணம் தெளித்து இழைக் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். உள்ளத்திலே ஓர் அலங்கோலம் இழைபிட்டபடியே இருந்தது.

ராமகிருஷ்ணர் ஆலங்குச்சியால் பல் விளக்கியபடி, ''அங்கே என்ன மேளச் சத்தம்? ஓகோ, ஆண்டு நிறைவா? ஆமாம், இப்படித்தான் எத்தனேயோ வீட்டில் புண்யாகவாசனம், தொட்டில், ஆண்டு நிறைவுன்னு அமர்க்களப்படறது. அப்புறம் ஒரு நாள் எல்லாரும் மௌனமாகத் தூளி கட்டி அதே குழந்தையைத் தூக்கிண்டு போறு...'' என்றார்.

அடக்கத்தின் உருவான சாரதை, பணிவின் பெட்டகமான சாரதை, பொறுமையின் பூஷணமான சாரதை வாய்விட்டுக் கொட்டினுள்: ''உலகத்திலே பிறக்கிற அத்தனே குழந்தைகளும் இப்படித்தான் செத்துப் போயிடறதா? அப்படி இருந்தா இந்த உலகம்னே ஒண்ணு இருக்க முடியாதே!''

''ஹா!'' என்றார் ராமகிருஷ்ணர். அவர் ஒரேயடியாக அதிர்ந்து விட்டார். ''விஷப் பாம்பின் வாலே மிதிச்சா உடனே அது சீறிண்டு வரமாதிரின்னு பேசறு! இவ ஒண்ணுமே தெரியாதவள்னு நினேச்சேனே, எத்தனே தப்பு! ரொம்பத் தெரிஞ்சவளாயிட்டா! 'மகாப் பிராக்ஞி'யாயிட்டா! 'எல்லாக் குழந்தைகளுமா செத்துப் போறது?' — கேட்டாளே ஒரு கேள்வி, போட்டாளே ஒரு போடு!''

ராவண வதத்துக்குப் பின் ஜானகியின் மனத்தை இம்மியும் புரிந்து கொள்ளாததுபோல் ராகவன் கொடுமை பேசிய ரீதியில் ராமகிருஷ்ணர் பேசுகிறார்!

சாரதையால் தாங்கவே முடியவில்லே. கோலத்தை அரைகுறையாக விட்டு உள்ளே ஓடினுள்! (தொடரும்)



# பாட்டருள் சிவமே வாழ்க! பண்ணிசைத் தவமே வாழ்க!



நாதமா முகில் நாளுமே பொழி
கீதமாமழை வெள்ளமாம்
வேதமாமணிச் செல்வமாம் இசை
மாதவச்சிவம் வாழ்கவே — இவர்
மார்கழித்தவம் வெல்கவே!

சீதளங் கமழ் தாமரைக் குளம்
திகழுமயிலையின் கற்பகம்
நாத னைத்தவ போதனைத் தினம்
ஓதிடும்சிவன் வாழ்கவே — உயிர்
ஓங்கு மாதவம் வெல்கவே!

கான மாய்ரச வீணையாய் எழில்
காவிரிக் கரைக் குயிலதாய்
வானெலாம் திகழ் வண்ண மாய்இசை
வாரியே தரும் நம்சிவம் — கலை
வாணி யின் தவம் வாழ்கவே!

போன மாயதன் மூலமாய் நதி
மோக னப்பிறை சூடுவார்
ஞான தாண்டவம் ஆடு வார்புகழ்
பாடு வார்சிவம் வாழ்கவே - ஒளி
நாடு வார்தவம் வெல்கவே!

ஓசையில் தவழ் ஒலியின் ஆசையில்
பாச விண்புகழ்ப் பாட் டெழும்
பாப நாசமாம் பக்தியால் இசை
பாட்ட ருள்சிவம் வாழ்கவே — நம்
பாட்ட னின் தவம் வெல்கவே!

பார தப்புகழ் பாரில் எங்கணும்
பரவவே இசை பெருகவே
பாவ ராகமொடு தாள ரூப நயம்
பருகவே மனகம் உருகவே—அருட்
பரம வான் சுகம் வாழ்கவே!

கவிஞர் எஸ்.டி.சுந்தரம்





# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் எழுபத்தெட்டு

## நண்பர்கள் பிரிவு

கொள்ளிடப் பெருநதியின் படகுத் துறையை நெருங்கி நாலு குதிரைகள் வந்து கொண்டிருந்தன. நாலு குதிரைகள் மீதும் நாலு வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் நமக்குத் தெரிந்தவர்கள்தாம். பார்த்திபேந்திரன், கந்தமாறன், வந்தியத் தேவன், பொன்னியின் செல்வன் ஆகியவர்கள்.

இவர்களில் முதல் இருவரும் படகில் ஏறிக் கொள்ளிடத்தைக் கடந்து வடதிசை நோக்கிப் பிரயாணம் செய்ய ஆயத்தமாக வந்தனர். மற்ற இருவரும் அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்புவதற்கு வந்தார்கள்.

படகுத் துறையை அடைந்ததும் நண்பர்கள் நால்வரும் குதிரை மேலிருந்து கீழே இறங்கினார்கள்.

''கந்தமாறா! உன் பழைய நண்பனிடம் உன் கோபமெல்லாம் போய் விட்டதல்லவா? இன்னமும் ஏதாவது மிச்சம் வைத்துக் கொண்டிருக்கிறாயா?'' என்று பொன்னியின் செல்வர் கேட்டார்.

''ஐயா! அவன்மீது கோபம் வைத்துக் கொள்ளக் காரணம் என்ன இருக்கிறது? என் அறிவீனத்தை நினைத்து நினைத்துப் பச்சாத்தாபப்படுவதற்குத் தான் நிறையக் காரணம் இருக்கிறது. நான் அவனுக்கு இழைத்த தீங்குகளையெல்லாம் மறந்து என்னிடம் பழையபடி சிநேகமாயிருக்க முன்வந்தானே, அந்தப் பெருந்தன்மைக்கு இணையே கிடையாது. என் சகோதரியை நதி வெள்ளத்தில் முழுகிச் சாகாமல் காப்பாற்றினானே, அதற்கு நான் இந்த ஜன்மத்திலே நன்றிக் கடன் செலுத்த முடியுமா? என் புத்தி எதனால் எப்படிக் கெட்டுப் போயிற்று என்பதை நினைத்துப் பார்த்தால், எனக்கே வியப்பாயிருக்கிறது. முதலில் உத்தேசித்தபடி மணிமேகலையை இவனுக்கு மணம் செய்து வைக்காமற் போனேனே? அப்படிச் செய்திருந்தால், இன்றைக்கு அவள் இவ்வாறு பிச்சியாகப் போயிருக்க மாட்டாள் அல்லவா?'' என்றான் கந்தமாறன்.

''அது ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? நதி வெள்ளத்தில் விழுந்த அதிர்ச்சியினால் சிறிது நினைவுத் தவறு ஏற்பட்டிருக்கிறது. சில நாட்கள் போனால் சரியாகிவிடாதா?'' என்றார் இளவரசர்.

''சாதாரண நினைவுத் தவறுதலாகத் தோன்றவில்லை. மற்ற எல்லாரையும் அவளுக்கு ஞாபகமிருக்கிறது; எல்லா விஷயங்களும் நினைவில் இருக்கின்றன. என்னையும் வந்தியத்தேவனையும் மட்டும் அவளுக்கு அடையாளம் தெரியவில்லை. என்னிடம் அவள் வைத்திருந்த அன்பு எத்தகையது என்பதை எண்ணும் போது என் நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. 'ஐயோ! என் அருமை அண்ணனை என்னுடைய கையினாலேயே கொன்று விட்டேனே?' என்று அவள் ஓலமிடும் குரல் என் காதிலேயே இருந்து கொண்டிருக்கிறது....''

''அது ஏன் அப்படி அவள் ஓலமிட வேண்டும்? நீதான் உயிரோடு இருந்து வருகிறாயே?''

''நான் உயிரோடுதானிருக்கிறேன்! இறந்து போயிருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும். ஆம், ஐயா! வந்தியத்தேவனை நான் கொன்றுவிட்டதாகவும், அதற்காக என்னை அவள் கொன்றுவிட்டதாகவும் அவள் உறுதி கொண்டிருக்கிறாள். ஒரு சமயம் என்னை நினைத்துப் புலம்புகிறாள். இன்னொரு சமயம் என் சிநேகிதனை நினைத்துக் கொண்டு, 'ஆற்று வெள்ளம் திரும்பி வருமா? இறந்து போனவர்களைக் கொண்டு தருமா?' என்று புலம்புகிறாள். எவ்வளவுதான் சொன்னா

அமரர் கல்கி

ஊம், என்னை அவனுடைய அண்ணன் என்றும் ஒப்புக் கொள்வதில்லை; வந்தியத் தேவனையும் அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை. 'நீ யார்? வல்லத்து இளவரசரை நீ பார்த்தது உண்டா' என்று இவனிடமே கேட்கிறான்...!''

''அப்படியா?'' என்று பொன்னியின் செல்வர் திரும்பிப் பார்த்த போது, வந்தியத்தேவன் கண்களில் கண்ணீர் ததும்புவதைக் கண்டார்.

''அடாடா! இப்போது வந்தியத்தேவர் வல்லத்து இளவரசரல்ல, வல்லத்து அரச



ராகவே ஆகிவிட்டார் என்று தெரிந்தால் அவனுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும்? அதற்குக் கொடுத்து வைக்காமற் போய் விட்டதே?'' என்றான் பார்த்திபேந்திரன்.

இதைக் கேட்ட கந்தமாறன் முகத்தில் வியப்புக் குறியுடன் பொன்னியின் செல்வரை நோக்கினான்.

''ஆம், அப்பா! 'உன் நண்பனுக்கு வாணகப்பாடி நாட்டைத் திரும்பக் கொடுத்து வல்லத்து அரசனாக்கி விடுவ

தென்று சக்கரவர்த்தி தீர்மானித்திருக்கிறார். அம்மாதிரியே உனக்கும் வாணகப்பாடிக்கு அருகில் வைதும்பராயர்கள் ஆண்ட பகுதியைத் தனி இராஜ்யமாக்கி அளிக்க எண்ணியிருக்கிறார். இனி, நீங்கள் இருவரும் அக்கம்பக்கத்திலேயே இருந்து வாழ வேண்டியவர்கள். எப்பொழுதும் உங்கள் சிநேகத்துக்குப் பங்கம் நேராதபடி நடந்து கொள்ள வேண்டும்'' என்றார் பொன்னியின் செல்வர்.

''சக்கரவர்த்தியின் கருணைக்கு எல்லையே இல்லைபோலிருக்கிறது. அப்படியானால், நான் மறுபடியும் கடம்பூருக்கே போக வேண்டியதில்லை அல்லவா?'' என்று கந்தமாறன் சிறிது உற்சாகத்துடன் கேட்டான்.

''வேண்டியதில்லை. அங்கே உங்களுடைய பழைய அரண்மனைதான் அநேகமாக எரிந்து போய்விட்டதே? மறுபடியும் அவ்விடத்துக்கு நீங்கள் போனால் பழைய ஞாபகங்கள் வந்து கொண்டேயிருக்கும். பாலாற்றின் தென் கரையில் புதிய அரண்மனை கட்டிக் கொள்ளுங்கள். உன் சகோதரிக்கு உடம்பு சௌகரியமானதும் அங்கே வந்து அவளும் இருக்கலாம்.''

''கோமகனே! இனி மணிமேகலை எங்களுடன் வந்து இருப்பாள் என்று நான் கருதவில்லை. தங்கள் பாட்டியார் செம்பியன்மாதேவியார் அவளைத் தம்முடன் ஸ்தல யாத்திரைக்கு அழைத்துப் போவதாகச் சொல்லியிருக்கிறார். மணிமேகலைக்கும் பெரிய பிராட்டியை ரொம்பவும் பிடித்துப் போயிருக்கிறது. இன்றைக்குக் கூடப் பெரிய பிராட்டி திருவையாற்றுக்கு என் சகோதரியை அழைத்துப் போயிருக்கிறார்.''

''ஆமாம்; பெரிய கோஷ்டியாகத்தான் போயிருக்கிறார்கள். புது மணம் புரிந்து கொண்ட என் சித்தப்பாவும் சிற்றன்னையும்கூடப் போயிருக்கிறார்கள். இந்த வேடிக்கையைக் கேளுங்கள். சமுத்திர குமாரியை இனிமேல் என் சிற்றன்னையாக நான் கருதி வர வேண்டும்!''

''சோழர் குலத்தில் இவ்வளவு அடக்கமாக ஒரு திருமணம் இதுவரையில் நடந்ததே கிடையாது; மதுராந்தகருக்கும் பூங்குழலிக்கும் நடந்த திருமணத்தைப் போல்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''என்னுடைய மகுடாபிஷேகம்கூட அவ்வளவு அடக்கமாகத்தான் நடக்கப் போகிறது!'' என்றார் அருள்மொழி.

''அது ஒரு நாளும் நடவாத காரியம்.....!'' என்றான் வந்தியத்தேவன்.

**பொ**ன்னியின் செல்வர் திடுக்கிட்டது போல் நடிப்புடன், ''எது நடவாது என்று கூறுகிறாய்? என்னுடைய பட்டாபிஷேகமா?'' என்றார்.

வந்தியத்தேவன் சிறிது வெட்கத்துடன், ''இல்லை, ஐயா! அடக்கமாக நடப்பது இயலாத காரியம் என்றேன். இப்போதே மக்கள் தங்கள் மகுடாபிஷேகத்தைப் பற்றி விசாரிக்கவும் பேசவும் ஆரம்பித்து விட்டார்கள்!'' என்றான்.

''கோமகனே! தங்களுடைய முடிசூட்டு விழாவுக்கு நாங்கள் இருக்க வேண்டாமா? இந்தச் சமயம் பார்த்து எங்களை வடதிசைக்கு அனுப்புகிறீர்களே! தை மாதம் பிறந்ததும் பட்டாபிஷேகத்துக்கு நாள் குறிக்கப்படும் என்று தஞ்சையில் பேசிக் கொண்டிருந்தார்களே! வந்தியத்தேவன் கொடுத்து வைத்தவன்; அதிர்ஷ்டசாலி!....'' என்றான் கந்தமாறன்.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. வந்தியத்தேவரையும் நான் சீக்கிரத்தில் ஈழத்துக்கு அனுப்பப் போகிறேன். நண்பர்களே! ஒன்று நிச்சயமாக நம்புங்கள்! என் அருமை நண்பர்களாகிய நீங்கள் இல்லாமல் என் மகுடாபிஷேகம் நடைபெறாது!'' என்று பொன்னியின் செல்வர் திடமாகக் கூறினார்.

''மிக்க நன்றி ஐயா! மகுடாபிஷேகத்துக்கு நாள் குறிப்பிட்டவுடனே குதிரை ஆட்களிடம் ஓலை கொடுத்து அனுப்புங்கள். உடனே வந்து சேருகிறோம்'' என்றான் கந்தமாறன்.

''நண்பா! அதைப் பற்றி என்ன கவலை? நீங்கள் வராமல் நான் பட்டாபிஷேகம் செய்துகொள்ளப் போவதில்லை இதை நிச்சயமாக நம்புங்கள். நான் பட்டாபிஷேகம் செய்து கொள்வது எதற்காக என்பதை மறந்து விடாதீர்கள். அரண்மனை நிலா மாடங்களிலும் உத்தியான வனங்களிலும் உல்லாசப் பொழுதுபோக்குவதற்காக நான் முடிசூட்டிக் கொள்ளப் போவதில்லை. நண்பர்களே! ஈழநாடு சென்றதிலிருந்து நான் கண்டுவரும் கற்பனைக் கனவுகளை உங்களிடம் முன்னமே சொல்லியிருக்கிறேன். இன்னும் ஒருமுறை சொல்லுகிறேன், கேளுங்கள்! என் பாட்டனாரின் தந்தையான பராந்தகச் சக்கரவர்த்தியின் காலத்தில் சோழ சாம்ராஜ்யம் அடைந்திருந்த மகோன்னதத்தைக் காட்டிலும் நம்முடைய காலத்தில் அதிக மேன்மையை அடைய வேண்டும். நாலாபுறத்திலும் இராஜ்யத்தை விஸ்தரிக்க வேண்டும். வடக்கே கங்கை நதிக் கரை வரைக்கும், கிழக்கே கடல் கடந்து ஸ்ரீவிஜய ராஜ்யம் வரைக்கும் சோழ நாட்டுப் படைகள் சென்று புலிக் கொடியை நாட்ட வேண்டும்.

மேற்கே மலைநாட்டையும் அப்பால் கடலில் உள்ள லட்சத் தீவுகளையும் கைப்பற்றி நமது படைகளையும் அங்கே நிலைத்து இருக்கச் செய்ய வேண்டும். மலை நாட்டில் 'சேர அரசன்' ஒருவன் எங்கிருந்தோ கிளம்பி யிருக்கிறான். பாண்டிய நாட்டிலும் யாராவது ஒரு பாண்டியன் திடீரென்று கிளம்புவான். இந்தப் புதிய சேர, பாண்டியர்களுக்குப் பலம் அளிப்பவர்கள் இலங்கை மன்னர்கள். ஆகையால் ஈழ நாட்டு மலைக் குகைகளில் ஒளிந்திருக்கும் மகிந்தனையும் அவனுடைய படைகளையும் தேடிப் பிடித்து அவர்களுடைய பலத்தை அடியோடு அழித்துவிட வேண்டும். இலங்கைத் தீவு முழுவதையும் நம் ஆட்சிக்குக் கொண்டுவர வேண்டும். இராஜ்யம் விஸ்தாரமானால் மட்டும் போதுமா? ஈழ நாட்டில் உள்ள புத்தரின் ஸ்தூபங்களைத் தோற்க அடிக்கும் படியான பெரிய பெரிய சிவாலயங்களையும் விஷ்ணு ஆலயங்களையும் இந்தப் புண்ணிய பூமியில் எழுப்ப வேண்டும். இந்த வீரத் திருநாட்டில் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பாடு வரப்போகிறவர்கள் நாம் நம் காலத்தில் செய்த திருப்பணிகளைக் கண்டு பிரமிக்க வேண்டும். நண்பர்களே! இக் கனவுகள் எல்லாம் என் காலத்தில் நிறைவேறத்தான் போகின்றன; நிறைவேற்றியே தீர்வேன். அதற்கு நீங்கள் ஒவ்வொருவரும் உதவி செய்ய வேண்டும். பார்த்திபேந்திரரே! சோழ நாட்டிலேயே மிக உயர்ந்த சைன்யப் பதவியை, என் தமையனார் கரிகாலர் வகித்து வந்த வடதிசை மாதண்ட நாயகர் பதவியைத் தங்களுக்கு அளித்திருக்கிறேன். அந்தப் பொறுப்பை நீர் சரிவர நிறைவேற்ற வேண்டும். என் தமையனாரின் அகால மரணம் நம் பகைவர்களிடையே பலவித ஆசைகளை மூட்டிவிட்டிருக்கும். வேங்கி அரசனும் இராட்டிரகூட மன்னனும் சோழ நாட்டில் உள் குழப்பங்கள் நேரிடும் என்றும், சிற்றரசர்களுக்குள்ளே போர் மூளும் என்றும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆகையால் வட பெண்ணைக் கரையில் நம் வீரர்கள் இரும்பு அரணைப் போல் நின்று காவல் புரிய வேண்டும். பல்லவர் குலத் தோன்றலே! வட பெண்ணைக் கரையில் வேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டு, கந்தமாறனை அங்கே தளபதியாக நிறுத்தி வைத்துவிட்டு, தாங்கள் உடனே காஞ்சிக்குத் திரும்புங்கள். அங்கே என் வீரச் சகோதரர் எடுப்பித்த பொன் மாளிகையைச் சக்கரவர்த்தி வந்து தங்குவதற்கு உகந்ததாகச் செய்து



ஸ்வாமி சிவானந்த சரஸ்வதி அவர்களை உலகுக்குத் தந்த பத்தமடையில் டிசம்பர் 2-ம் தேதி அவர்களது திரு உருவச் சிலை, தெய்வீக வாழ்க்கைச் சங்கத் தலைவர் ஸ்ரீ சிதானந்தர் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்தக் கோலாகல வைபவத்திற்கு ஸ்ரீமதி சிவானந்த விஜயலக்ஷ்மி, ரமணி அம்மாள் ஆகியோரது பஜனையும், சுத்தானந்த பாரதியாரின் சிறப்புரையும் பொலிவளித்தன. அடுத்த செப்டம்பர் 8-ந் தேதியிலிருந்து ஆண்டு தோறும் சிவானந்தரின் ஜயந்தித் திருநாள் பத்தமடையில் விமரிசையாகக் கொண்டாடப்படும் என்ற மகிழ்ச்சிக்குரிய விஷயத்தை ஸ்வாமி சிதானந்தர் வெளியிட்டார்.

வையுங்கள். என்னுடைய தலையில் கிரீடத்தை வைத்தவுடனே, சக்கரவர்த்தி காஞ்சிக்குப் பிரயாணமாவதற்கு விரும்புகிறார்!''

இதைக் கேட்டுக் கந்தமாறன் கண்களில் நீர் ததும்ப, ''கோமகனே! போர்க்களத்தில் நான் எனது போர்த் திறமையை இன்னும் நிரூபித்துக் காட்டவில்லையே? எல்லைக் காவல் படைக்கு என்னைத் தளபதியாக நியமிக்கிறீர்களே? நான் தகுதி உள்ளவனா?'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டான்.

''நண்பா! எல்லாம் வல்ல இறைவன் எனக்குச் சில சக்திகளை அளித்திருக்கிறான். யார் யார் எந்த எந்தப் பணிக்குத் தகுதியுள்ளவன் என்பதை எளிதில் கண்டுபிடிக்கும் சக்தியையும் அளித்திருக்கிறார். உன்னை வடக்கு எல்லைப் படைக்குத் தளபதியாக நியமித்திருப்பது போல், உன் நண்பர் வல்லத்தரசரை ஈழப் படைக்குத் தளபதியாக நிய

மித்திருக்கிறேன்! இரண்டுபேரும் உங்கள் கடமைகளை நன்கு நிறைவேற்றுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது!'' என்றார் பொன்னியின் செல்வர்.

''இன்னும் சில காலத்துக்கு இவர்களில் ஒருவரை வடக்கு எல்லையிலும் இன்னொருவரைத் தெற்கு எல்லையிலும் வைத்திருப்பது நல்ல யோசனைதான். எங்கேயாவது சேர்ந்திருந்தால், தாங்களும் அங்கே இல்லாமலிருந்தால், பழைய ஞாபகம் வந்து இருவரும் மோதிக்கொண்டாலும் மோதிக்கொள்வார்கள்'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஐயா! இனி அம்மாதிரி ஒரு நாளும் நேரவே நேராது!'' என்று கந்தமாறன் சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் அருகில் சென்றான்.

''நண்பா! என்னுடைய தவறுகளையெல்லாம் மன்னித்து விட்டாய் அல்லவா?'' என்று கேட்டான்.

வந்தியத்தேவன் அதற்கு வாயினால் மறுமொழி கூறாமல், இரு கரங்களையும் நீட்டிக் கந்தமாறனை மார்புறக் கட்டித் தழுவிக் கொண்டான்.

நண்பர்கள் இருவரும் சிறிது நேரம் மௌனமாகக் கண்ணீர் உகுத்தனர்.

பின்னர், பார்த்திபேந்திரனும், கந்தமாறனும் ஆயத்தமாக நின்ற படகில் ஏறிக்கொண்டார்கள்.

படகு நதியில் பாதி தூரம் போகும் வரையில் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பொன்னியின் செல்வரும் வந்தியத்தேவனும் தஞ்சையை நோக்கிக் குதிரைகளைத் திருப்பினர்.

## அத்தியாயம் எழுபத்தொன்பது

# சாலையில் சந்திப்பு

பொன்னியின் செல்வரின் முடிசூட்டு விழா விரைவிலேயே நடைபெறப் போகிறது என்று நாடு நகரமெல்லாம் தெரிந்து போயிருந்தது. மக்கள் ஒரே ஆர்வத்துடன் அந்த வைபவத்தை எதிர்நோக்கியிருந்தார்கள்.

ஆதித்த கரிகாலரின் அகால மரணம், மந்தாகினியின் உயிர்த் தியாகம், பெரிய பழுவேட்டரையரின் சபத நிறைவேற்றம் ஆகிய நிகழ்ச்சிகள் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் உள்ளத்தைப் பெரிதும் துன்புறச் செய்திருந்தன. ஆயினும் இராஜ்ய உரிமை சம்பந்தமான சச்சரவுகள் ஒரு மாதிரி தீர்ந்து போய், அருள்மொழி வர்மருக்கு முடிசூட்டுவதைச் சிற்றரசர்கள், பொது மக்கள் அனைவரும் ஒருமுகமாக ஆதரித்தது, அவருடைய நொந்துபோன உள்ளத்துக்கு ஓரளவு ஆதரவு அளித்து வந்தது.

தை மாதம் பிறந்தவுடனே நல்ல நாள் குறிப்பிட்டுப் பொன்னியின் செல்வரின் தலையில் சாம்ராஜ்ய பாரத்தைச் சுமத்திவிட்டுக் காஞ்சிக்குப் புறப்பட்டுச் செல்லச் சக்கரவர்த்தி முடிவு செய்திருந்தார். அங்கே தமது வீரப் புதல்வன் கரிகாலன் தமக்கென்று நிர்மாணித்த பொன் மாளிகையிலே மிச்சமுள்ள தம் வாழ்நாளைக் கழித்துவிடவும் தீர்மானித்திருந்தார்.

முடிசூட்டு வைபவத்தை அதிக ஆடம்பரமில்லாமல் நடத்திவிட வேண்டும் என்று சுந்தர சோழர் எண்ணியதிலும் வியப்பில்லை அல்லவா?

இந்த விஷயத்தில் அருள்மொழிவர்மரும் பரிபூரணமாகத் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்ற எண்ணியிருந்தார். ஆகையால், முடிசூட்டு விழா முடியும்வரையில் நாடு நகரங்களில் பொது மக்களிடையில் அதிகமாகப் போவதில்லையென்று தீர்மானித்திருந்தார்.

கொள்ளிடத்தின் படகுத் துறையிலிருந்து தஞ்சைக்கு நேர் வழியாகப் போவதென்றால், திருவையாறு நகரின் வழியாகப் போக வேண்டும். அந்த நகருக்குள் சென்றால், மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு ஆரவாரம் செய்வார்கள் என்பது நிச்சயம். ஆகையால், நண்பர்கள் இருவரும் அந்த நகர்வழியே புகாமல், சிறிது மேற்கே ஒதுங்கிச் சென்று காவேரி நதியைக் கடந்தார்கள். குடமுருட்டி நதியை அடைந்ததும், அதன் கரையோடு தஞ்சை ராஜபாட்டையை நோக்கிச் சென்றார்கள்.

ஐந்து நதிகள் அடுத்தடுத்துப் பாயும் அந்த அற்புதமான பிரதேசத்தின் நீர்வளமும் நிலவளமும் மார்கழி மாதத்தில் கண்கொள்ளாக் காட்சியாகத் திகழ்ந்தன. இரு கரையும் தொட்டுக் கொண்டு வெள்ளம் ஓடும் காலத்தைக் காட்டிலும், அரை ஆறு இனிய புனலும் அரை ஆறு மணல் திடலுமாகத் தோன்றிய காட்சி வனப்பு மிகுந்ததாயிருந்தது.

நதியின் இருபுறங்களிலும் தென்னையும், கமுகும், கதலியும், கரும்பும் செழித்து வளர்ந்திருந்தன. தோப்புகள் இல்லாத இடங்களிலெல்லாம் நன்செய் வயல்களில் பொன்னிற நெற் பயிர்கள்

செந்நிறக் கதிர்களின் பாரந் தாங்காமல் தலை சாய்ந்து கிடந்தன.

இடையிடையே வாவிகளிலும் ஓடைகளிலும் தலைநிமிர்ந்து நின்ற தாமரைகளும் குமுதங்களும் செங்கழுநீர்களும் வர்ணச் சித்திரக் காட்சியாகத் திகழ்ந்தன.

இவற்றையெல்லாம் பார்த்துப் பார்த்து வியந்து கொண்டு வந்த வந்தியத் தேவனை நோக்கிப் பொன்னியின் செல்வர், "நண்பரே! இவ்வளவு வனப்பும் வளமும் பொருந்திய இடம் இந்த உலகில் வேறு எங்கேனும் இருக்க முடியுமா? இப்படிப்பட்ட நாட்டின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்வது எவ்வளவு பெரிய பாக்கியம்? இந்தப் பாக்கியத்தைச் சில காலத்துக்கு முன்புவரையில் நான் வேண்டாம் என்று மறுதளித்துக் கொண்டிருந்ததை நினைத்தால் எனக்கே வியப்பாக இருக்கிறது!" என்றார்.

"எனக்கு அதில் வியப்பு ஒன்றுமில்லை, ஐயா! அரச குலத்தவர்களின் சஞ்சல உள்ளத்தைப் பற்றி அடிக்கடி பெரியோர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன்!" என்றான் வந்தியத்தேவன்.

"நீர் ரொம்பவும் பொல்லாதவர்; அதோடு நன்றியும் இல்லாதவர். ஈழ நாட்டுப் போர்ப் படைக்கு உம்மைத் தளபதி ஆக்கியதற்கு இன்னும் நன்றி கூடச் செலுத்தவில்லை. என்னைச் சஞ்சல புத்தி யுள்ளவன் என்று வசை கூறுகிறீர்!"

"சாதாரண மக்கள் விஷயத்தில் வசையாக இருப்பது அரச குலத்தாரிடையில் புகழுக்குக் காரணமாயிருக்கக் கூடும் அல்லவா? இன்றைக்கு ஒருவனுக்கு மரண தண்டனை விதிக்கிறீர்கள். மறுநாள் அவனை மன்னித்துத் தளபதி ஆக்குகிறீர்கள். இத்தகைய சஞ்சல புத்தியினால் அரசர்களுடைய புகழ் அதிகமாகத்தானே செய்யும்? 'ஆகா! நம் மன்னர் எத்தனை கருணை உள்ளவர்' என்று மக்கள் புகழ்வார்கள் அல்லவா?"

"ஆம், ஆம்! ஆனால் இன்றைக்குத் தளபதியாகச் செய்தவனுக்கு நாளைக்கு மரண தண்டனையும் விதிக்கலாம். அப்போது ஜனங்கள் என்ன சொல்வார்கள்?"

"நடுநிலைமை தவறாமல் நீதி வழங்கும் மன்னர் பெருமான் என்றும், மனுநீதிச் சோழரின் புனர் அவதாரம் என்றும் சொல்லிப் பாராட்டுவார்கள்."

பொன்னியின் செல்வர் கலகலவென்று சிரித்துவிட்டு, "அப்படியானால் உமக்கு அளித்த வாணகப்பாடி இராஜ்யத்தையும் ஈழத்துச் சேனையின் தளபதி பதவியையும் நான் திரும்பப் பிடுங்கிக் கொண்டால், அதில் உமக்கு அதிசயம் ஒன்றுமே இராதல்லவா?" என்றார்.

"அதிசயப்படவும் மாட்டேன்; துயரப்படவும் மாட்டேன். இப்போது கூடத் தாங்கள் என்னை ஈழ நாட்டுக்கு அனுப்புவது எனக்குப் பெரிய தளபதி பதவி தரும் நோக்கத்துடனா அல்லது என்னை இந்த அழகிய சோழ நாட்டில் இருக்கக் கூடாது என்று தேசப் பிரஷ்டனுக்கும் நோக்கத்துடனா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது!"

"உண்மையில் இவ்வளவு சாமர்த்திய சாலியான உம்மை எனக்கு முதன் மந்திரியாக்கிக் கொண்டு என் அருகிலேயே வைத்துக் கொள்ளவே எனக்குப் பிரியமாக இருக்கிறது. ஆனால் முதன் மந்திரி அநிருத்தர் உமக்காகத் தமது பதவியை விட்டு விலகிக் கொள்வார் என்று தோன்றவில்லை."

"அது ஒன்றுதான் காரணமாயிருந்தால், நானே முதன் மந்திரி அநிருத்தர் அவர்களிடம் கேட்டுக் கொள்கிறேன்."

பொன்னியின் செல்வர் நகைத்துவிட்டு, "இல்லை; வேறு காரணமும் இருக்கிறது!" என்றார்.

"அப்படித்தான் நானும் நினைத்தேன்."

"என்ன நினைத்தீர்?"

"தாங்கள் இப்போதெல்லாம் மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு, வெளியில் ஒன்று சொல்கிறீர்கள் என்று."

"வல்லத்தரசே! தங்களுடைய குற்றச்சாட்டை மெய்ப்பிக்க ஓர் உதாரணம் சொல்ல முடியுமா?"

"நன்றாக முடியும். தங்களுடைய மகுடாபிஷேக வைபவத்துக்குத் தை மாத ஆரம்பத்திலேயே நாள் வைத்திருக்கிறது. அது தங்களுக்குத் தெரியும். அப்படியிருக்கும் போது, சற்றுமுன் நம்மைப் பிரிந்துசென்றவர்களிடம் 'நீங்கள் இல்லாமல் என் மகுடாபிஷேகம் நடைபெறாது' என்றீர்கள். அதைப் பற்றி நான் வேறு என்ன நினைப்பது?" என்று கேட்டான்.

பொன்னியின் செல்வர் மறுபடியும் நகைத்துவிட்டு, "ஆமாம்; முன்னெல்லாம் நான் மனத்தில் தோன்றுவதை அப்படியே வெளிப்படையாகச் சொல்வது என்றுதான் வைத்துக்கொண்டிருந்தேன். வந்தியத்தேவரோடு சிநேகமான பிறகு மந்திர தந்திரங்களில் பயிற்சி பெற்று வருகிறேன்!" என்றார்.

"வீணாக எனக்குப் புகழ்ச்சி கூறுகிறீர்கள்! தங்களுக்குத் தெரியாத மந்திர தந்திரம் உலகில் வேறு என்ன இருக்க முடியும்? யானையின் காதில் ஓதிய மந்திரத்துக்கும் யானைப் பாகன்

Who cares if your hair is different?

# Sunsilk cares – with 3 special shampoos

## Pick the one that's perfect for you

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease... gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair... revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** – more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-140

# 100% இயற்கை

பதினெட்டு
அபூர்வ மூலிகைகளைக்
கொண்டு
தயாரிக்கப் படுவது
விக்கோ
**வஜ்ரதந்தி**

பிரபல ஆயுர்வேத பற்பசை மற்றும் பல் பொடியான விக்கோ வஜ்ர தந்தி 18 அரிய மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படு கிறது. இம் மூலிகைகளின் தனிப்பட்ட குணங்கள் யாவரும் நன்கு அறிந்ததே. ஆனால் குறிப்பிட்ட அளவுகளில் இவற்றைக் கலக்கும்போது அவற்றின் குணத் திறன் அதிகமாகிறது. விக்கோ வஜ்ர தந்தியின் தற்போதைய செய்முறை பல்லாண்டு ஆராய்ச்சியின் விளைவாகும்.

தவறாது விக்கோ வஜ்ர தந்தி உபயோகித்தால், பற்சிதைவு, பயோரியா, ஈறுகளிலிருந்து சீழ் மற்றும் இரத்தம் வருதல், மூச்சிலே துர் நாற்றம் முதலியவை தடுக்கப் படுகிறது.

ஒரு முறை உபயோகித்துப் பாருங்கள்; உண்மை புரியும்.

ஆயுர்வேத
பற்பசை மற்றும்
பற்பொடி.
வாய் ஆரோக்கியத்துக்கு
ஒப்பற்றது.










விக்கோ லாபெரட்டரீஸ்
தாதர், பம்பாய்-14

TML

ஸ்டாக்கிஸ்டுகள்: R. L. கௌடர் & கோ., 59, பந்தர் தெரு, சென்னை -1

வேஷம் போட்டு உலகை ஏமாற்றிய தந்திரத்துக்கும் இணையானவை என்ன உண்டு ?''

'' அப்படியே இருக்கட்டும் ! என்னிடமே நீர் இனி மந்திர தந்திரங்களைக் கற்றுக் கொள்ளலாம்.''

''அவ்வாறு நான் அதிகமாகக் கற்றுக் கொண்டுவிடப் போகிறேனே என்றுதான் என்னை இலங்கைக்கு விரட்டி விடப் பார்க்கிறீர்களோ ?''

''நண்பரே! ஈழ நாட்டுக்குப் போவதில் தங்களுக்கு ஒருவேளை விருப்பம் இல்லையா, என்ன?''

''யார் சொன்னார்கள்? இலங்கைக்கு அப்பால் இன்னும் தூரத்தில் உள்ள இடங்களுக்குப் போகும்படி கட்டளை இட்டாலும் புறப்பட ஆயத்தமாயிருக்கிறேன். எவ்வளவு சீக்கிரம் அனுப்புகிறீர்களோ, அவ்வளவுக்கு மகிழ்ச்சி அடைவேன் !''

''என்னை விட்டுப் பிரிந்து போவதில் அவ்வளவு மகிழ்ச்சியா தங்களுக்கு?''

''ஆம், ஐயா! பேரரசர்களிடமிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறோமோ, அவ்வளவுக்கு நல்லது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். தூரத்தில் இருந்தால், அரசர்களுடைய சிநேகத்தை இழந்து விடாமல் காப்பாற்றிக் கொள்ளலாம்.''

''அப்படியானால், தாங்கள் ஏமாற்றத்துக்கு உள்ளாக நேரிடும்....''

''எவ்வளவு தூரம் போனாலும் தங்கள் சிநேகத்தை நீடித்துக் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்கிறீர்களா ?''

''இல்லை ; இல்லை. அதிக காலம் என்னைத் தாங்கள் பிரிந்திருக்க முடியாது என்று சொல்கிறேன். சில தினங்களுக்கெல்லாம் நானும் ஈழத்துக்கு வந்து தங்களுடன் சேர்ந்து கொள்வதாக உத்தேசித்திருக்கிறேன். தங்களை உடன் அழைத்துக் கொண்டு கடல்களைக் கடந்து அப்பாலுள்ள தீவாந்தரங்களுக்கெல்லாம் போகத் திட்டமிட்டிருக்கிறேன். நம்முடன் சமுத்திர குமாரியையும் அழைத்துப் போக முடியவில்லையே என்றுதான் வருத்தமாயிருக்கிறது !''

''ஐயா! என்னுடன் சேர்ந்து தாங்கள் தந்திர மந்திரங்கள் கற்றுக் கொண்டீர்கள். தங்களுடன் சிநேகமானதிலிருந்து நான் உண்மையைப் பேசுவது என்று விரதம் எடுத்துக் கொண்டேன். இப்போது என்னுடைய மனத்தில் உள்ளதைத் தங்களிடம் சொல்லட்டுமா ?''

''தாராளமாகச் சொல்லுங்கள் !''

''என் நண்பர் சேந்தன் அமுதனிடமிருந்து, — தங்கள் சித்தப்பா மதுராந்தகத்தேவரிடமிருந்து — சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கள் எடுத்துக் கொள்கிறீர்கள். அதற்கு ஒரு மாதிரி நியாயம் உண்டு. தாங்களே முடிசூட வேண்டும் என்பது மக்களின் விருப்பம் என்று காரணம் காட்டலாம். ஆனால் அவரிடமிருந்து பூங்குழலியை அபகரித்திருந்தால், அது போன்ற பெருந் துரோகச் செயல் வேறு எதுவும் இருக்க முடியாது. அதற்கு நியாயமே சொல்ல முடியாது. சமுத்திரகுமாரி இப்போது மதுராந்தகத் தேவரின் தர்மபத்தினி என்பதைத் தாங்கள் நினைவு வைத்துக் கொள்ளுங்கள்!'' என்றான் வந்தியத்தேவன்.

பொன்னியின்செல்வர் கலகலவென்று சிரித்து விட்டு, ''என்னைத் தசகண்ட இராவணனோடு சேர்த்து விடுவீர்கள் போலிருக்கிறதே!'' என்றார்.

பின்னர், ''தங்களுடைய நண்பருக்குப் பரிந்து தாங்கள் பேசுவது நியாயந்தான் ! ஆனால், பூங்குழலியின் நிலைமை என்ன? அவள் என் சித்தப்பாவை மனமுவந்து கல்யாணம் செய்து கொண்டாளா?'' என்று கேட்டார் அருள்மொழிவர்மர்.

''அதற்கு என்ன சந்தேகம்? கோமகனே! தாங்கள் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாகவாம். இந்தப் பூமண்டலம் முழுவதையும் வென்று ஒரு குடை நிழலில் கொண்டு வந்து ஆட்சி புரியலாம். ஆனால் பூங்குழலி அம்மையை மட்டும் அவருடைய விருப்பத்துக்கு விரோதமாக எந்தக் காரியமும் செய்யும்படி கட்டாயப்படுத்த முடியாது. செம்பியன் மாதேவியின் செல்வப் புதல்வரிடம் பூங்குழலி அம்மை கொண்டிருந்த அன்

பின் ஆழத்தை நான் அறிந்து கொள்ளும் பேறு பெற்றேன். அதற்கு இணையான அன்பை இன்னும் ஓரிடத்திலேதான் கண்டிருக்கிறேன்!''

''அது எங்கே கண்டீர்கள்? என்னிடம் அதைப் பற்றிச் சொல்லலாம் என்றால், சொல்லுங்கள்!''

''கொடும்பாளூர் இளவரசி வானதியிடம்தான் கண்டேன். அத்தகைய அன்பை வேறு எங்கே காண முடியும்?''

''பொய்! பொய்! உண்மை பேசும் விரதத்தை அதற்குள்ளே மறந்துவிட்டீரோ? மனத்தில் ஒன்றை ஒளித்து வைத்துக் கொண்டு வெளியில் ஒன்றைத் திரித்துச் சொல்கிறீரே?''

''இல்லவே இல்லை, ஐயா! மனத்தில் எண்ணியதைத்தான் சொல்கிறேன்!''

''வேறு எங்கேயும் நீர் அத்தகைய காதலைக் கண்டதில்லையா?''

''இல்லை என்றுதான் சொல்லுகிறேனே?''

''அடே பாதகா! இரக்கமற்ற அரக்கனே! உனக்காக ஒரு பெண் தன் உயிரைத் தியாகம் செய்ய முன்வந்து மதியை இழந்து பிச்சியாகியிருக்கிறாள்! அவளுடைய காதல் உனக்குப் பெரிதாகத் தோன்றவில்லையா?'' என்று பொன்னியின் செல்வர் உண்மையான கோபத்துடன் கேட்டார்.

**வ**ந்தியத்தேவன் சிறிது நேரம் வரை மௌனமாக இருந்தான். பின்னர் ''ஐயா! தாங்கள் காரணகாரியங்களை மாற்றிச் சொல்கிறீர்கள். மணிமேகலையிடம் எனக்கு இரக்கம் இல்லாமற் போகவில்லை. அவளை நினைத்து நினைத்துக் கண்ணீர் வடிக்கிறேன். ஆனால் அவள் 'பிச்சி'யாகப் போனதற்குக் காரணம் நான் அல்ல; அவளுடைய சகோதரன் கந்தமாறன்தான்! மேலும் நாங்கள் இருவருமே அந்தப் பெண்ணுக்கு இறந்தவர்களாகி விட்டோம். இனி அதைப் பற்றிப் பேசி என்ன பயன்?'' என்றான்.

''நான் சற்றுமுன் கோபமாகப் பேசியதற்காக வருத்தப்படுகிறேன்..'' என்று பொன்னியின் செல்வர் ஆரம்பித்தார்.

''எனக்கு அதில் வருத்தமும் இல்லை; வியப்பு மில்லை. இம்மாதிரி திடீர்க் கோபத்தை எதிர்நோக்கித்தான் சீக்கிரமே இலங்கைக்குப் புறப்பட விரும்புவதாகச் சொன்னேன்.''

''தங்களை இலங்கைக்கு அனுப்புவதற்கு இன்னொரு காரணமும் உண்டு என்று சொன்னேன் அல்லவா?''

''ஆம், பிரபு!''

''சில காலம் தாங்கள் தூர தேசத்தில் இருந்துவிட்டுத் திரும்பிவந்தால், ஒருவேளை தங்களை மணிமேகலை அடையாளம் கண்டு கொள்ளலாம் என்று என் தமக்கையார் கருதுகிறார்!''

''தெரிந்து கொண்டேன் ஐயா! என்னைத் தூர தேசத்துக்கு அனுப்புவதில் தங்களை விட இளையபிராட்டிக்கு அதிக சிரத்தை இருப்பதாகத் தெரிந்து கொண்டேன்! நாம் யாரைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோமோ, அவர்களே அதோ வருகிறார்கள்!'' என்று வந்தியத்தேவன் சுட்டிக் காட்டினான்.

குடமுருட்டி நதிக் கரையோடு வந்த அந்த நண்பர்கள் இருவரும் அச்சமயம் திருவையாற்றிலிருந்து தஞ்சாவூர் போகும் இராஜபாட்டையை நெருங்கிக்கொண்டிருந்தார்கள். அந்த இராஜபாட்டையில் முன்னும் பின்னும் பரிவாரங்கள் புடைசூழப் பல்லக்கு ஒன்று வந்து கொண்டிருந்தது. அதில் குந்தவை தேவியும், கொடும்பாளூர் இளவரசியும் வீற்றிருந்தார்கள். குதிரைகள் மீது வந்த நண்பர்கள் இருவரையும் பார்த்ததும் அப்பெண்மணிகளின் கண்கள் வியப்பினால் விரிந்தன; அவர்களுடைய முகங்கள் மகிழ்ச்சியால் மலர்ந்தன. (தொடரும்)

# வட்ட மேஜை

**எ**ன்னுடைய பொது வைப்பு நிதியிலிருந்து எனது தாயாரின் வைத்தியச் செலவுக்கான செலவைச் சரிகட்ட கடன் கேட்டு விண்ணப்பித்திருந்தேன். இரண்டு மாதங்கள் கழித்து விண்ணப்பம் திரும்பி வந்தது.

காரணம்: செலவுக்கான செலவை சரிகட்ட என்று எழுதியது தவறாம். செலவை ஈடு செய்ய என்று எழுத வேண்டுமாம். அலுவலக ஆள் அகராதியில் ஈடு செய்ய என்ற வார்த்தைதான் இருக்கிறதாம்.

சரிகட்ட - ஈடுசெய்ய என்னும் வார்த்தைத் தகராறு அவசரத்துக்குப் பணம் பெற முடியாமல் தடுத்துக்கொண்டிருக்கிறது!

வேலூர் 7
8-12-71 இ. மணிமேகலை

**த**ஞ்சை மாவட்டத்தில் ''தீவிர குடும்பக் கட்டுப்பாடு இயக்கம்'' காரணமாக, பள்ளி ஆசிரியர்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர். ஆசிரியர் ஒருவருக்கு, மூன்று நபர்கள் வீதம் 'அறுவைச் சிகிச்சைக்கு' ஆட்கள் சேகரித்து அனுப்பவேண்டிய கஷ்டத்திலிருக்கிறார்கள். தவறுபவர்களுக்கு வேலையிலிருந்து நீக்கலோ, அல்லது வெகு தொலைவிற்கு மாற்றலோ அளிக்கப்படுமாம். ஆட்களுக்குத் தங்கள் பணத்தை விரயமாக்கினாலும் வர மறுக்கிறார்கள். கௌரவமான உத்தியோகத்திலிருப்பவர்களை அரசு ஏன் இவ்வாறு தரக் குறைவான வேலை செய்ய நிர்ப்பந்திக்கிறது?

திருச்செங்காட்டாங்குடி
13-12-71 வி. நாகராஜன்

# மூன்று மந்திரவாதிகள்

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ராமு























காளாமுகன் தன் மாயக் குதிரை மீதேறிக் குலதெய்வ வழிபாட்டுக்குப் போகவிருந்த குணவதியையும் கவர்ந்து கொண்டு தன் கோட்டைக்குப் போய் விடுகிறான்.










உயிர் போகும் அகோரப் பசியிலும் பருந்தின் வேண்டுகோளுக்கு இணங்கினான் ஆனந்தன்.




தேனடையையும் தியாகம் செய்து
நடந்த ஆனந்தனால் பசியின் கொடுமை
யைத் தாங்க முடியாதபோது...
என் பசிக்கு எதையாவது
போடாவிட்டால் நான் இறந்து
தான் போவேன். இந்தப் புலிக்
குட்டிகளைக் கொன்று...


அரசகுமாரனே, உன் பசியின்
கொடுமையை நான் அறிவேன்.
என் குழந்தைகளை நீ உணவாக்கிக்
கொள்ளாமலிருந்தால், உன்னுடைய
ஆபத்துக் காலத்தில் நான்
உதவுவேன்.
நான் பசியால்
இறந்தாலும் சரி, உன்
குழந்தைகளைக் கொல்ல
மாட்டேன் தாயே...
தாயே!


பசியினால் மயங்கி விழுகிறான்
ஆனந்தன். அப்போது ஓர் அபூர்வமான
கனவு. பெரிய நீர்வீழ்ச்சி. அதன்
பின்னால் குகை போன்றதொரு வழி...


இருள் கவிந்த அக்குகையின் வழியே
தட்டுத் தடுமாறிச் செல்கிறான்
ஆனந்தன். அதன் முடிவில்... ஒரு
பரந்த சமவெளி. அதில்...


ஒரு மாளிகை. அம்மாளிகையின் உப்பரிகையில்
மந்திரவாதியின் அடிமையாகக் கலாவதி கண்ணீருடன்...


கண்டது கனவு தான்.
ஆனால் அது என்
கலாவதியின் இருப்பி
டத்தைத் தெரிவிக்கும்
ஏதோ ஒரு சூசகம்
தான். என் கலாவை
எப்படியும் மீட்டே
தீருவேன்.

தொடரும்



# சென்ட்ரல்

பி.வி.ஆர்

உலகில் எப்போதாவது ரயில்வே ஸ்டேஷனில் கல்யாணம் நடந்திருக்கிறதா? நடக்க முடியுமா? -இரு கேள்விகள் : ஆராய்ச்சியாளர்களுக்காக.

## அத்தியாயம் 21

விஷ்ணு சகஸ்ரநாமத்தை முடித்து, சங்கரி வார்த்துப்போட்ட இட்டிலி மாவு தோசையையும் வேண்டா வெறுப்புடன் சாப்பிட்டுவிட்டு, ரேணுகா, மங்களாவிடம் ஒரு பத்து நிமிஷங்கள் பேசிவிட்டுத் தொழிலுக்குப் புறப்படலாம் என்றிருந்த கணபதியை ஒரு புதுக் குரல் அழைத்தது.

கணபதி ஏறிட்டுப் பார்த்தார். முன்பின் பார்த்திராத, ஐம்பது வயதுக்கும் மேலாகவே மதிக்கத் தகுந்த வயதில், முகமே மந்தகாசப் புன்னகையில் பிரகாசிக்க ஒருவர் நின்று கொண்டிருந்தார்.

''நான் உள்ளே வரலாமா?''

''ஓ, பேஷா!''

அவர் உள்ளே வந்ததும், கணபதி சொல்லும் முன்பே ஒரு நாற்காலியில் அமர்ந்தார். இன்னும் நின்று கொண்டிருந்த கணபதிக்கு ஒன்றும் புரியவில்லை. வந்திருக்கிறவர் யார், எதற்காக வந்திருக்கிறார்? இன்ஷூரன்ஸ் ஏஜண்டா? குடும்பக் கட்டுப்பாடு அதிகாரியா? பத்திரிகை நிருபரா? அவர் வினாடி நேரத்தில் தம்முள் கேள்விகளைக் குலுக்கிப் போட்டுப் பார்த்தார். புரியவில்லை; விளங்கவில்லை.

''என் பேரு எம். தேவன்.... நான் நம்ப சமூகத்தில் இருக்கிற வழக்கத்தைப் பொருட்படுத்தாமல் உங்கள் வீட்டுக்கு வந்திருக்கிறேன்...''

''சொல்லுங்கள்.''

''நான் எம். தேவன்.... வந்து....''

''நான் எஸ். கணபதி!''

''என் பையன் டாக்டர். எம். டி. பாஸ் செய்து சொந்தக் கிளினிக் வைத்து 'ஓகோ' என்று பிராக்டிஸ் செய்கிறான். இதே சென்னையில்...''

எம். தேவன் நிறுத்தி, நிதானமாக, புன்னகையை ஓர் அலங்காரமாக வைத்து, கணபதியின் பொறுமையைச் சோதித்துக் கொண்டே பேசினார்.

''நான் என் வாழ்க்கையில் முக்கியமான காலத்தை அயல் நாடுகளில் கழித்து விட்டேன். கல்கத்தாவிலே எனக்கு ஒரு தொழிற்சாலை இருக்கிறது. கடுகு எண்ணெயிலிருந்து ஒரு புதுவிதமான மருந்து தயாராகிறது. இதைத் தவிர, தொழில் இலாகா எனக்கு ஒரு யூனிட் சமீப காலத்தில் கொடுத்திருக்கிறது. ரேடியோ தயாரிப்புக்காக.''

கணபதியின் உள்ளத்தில் வெறுப்பின் விதை முளை விடலாயிற்று.

''நான் 'போர்' அடிக்கிறேன் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். பரவாயில்லை. நீங்கள் கொஞ்சம் பொறுத்துக்கொள்ளத்தான் வேண்டும்.... என்ன சொன்னேன்... ஆமாம்... தொழில் யூனிட்... இரண்டுமாகச் சேர்ந்து ஆறு லட்சம் பெறும்... இதைத் தவிர, பணம், நகை தங்கக் கட்டிகள்... ஒரே மனைவி...ஒரே பையன். அவன் ஒரு டாக்டர். எம்.டி. படிச்சிருக்கான். சொந்த கிளினிக்... இந்தப் பிள்ளை எதைக் கேட்டாலும் நான் வாங்கிக் கொடுக்கத் தயங்கவே மாட்டேன். அவன் சந்தோஷம்தான்

என் சந்தோஷம், மனைவியின் மகிழ்ச்சியும்கூட. என்ன சொல்கிறீர்கள்?''

''ஒன்றும் சொல்லத் தெரியவில்லை.''

''அப்படியானால் சரி. என் பிள்ளைக்கு வயது இருபத்தேழு. டாக்டர். எம். டி. படித்தவன் பத்து நாட்களுக்கு முன்னாலே பெங்களூர் போனான். ஏதோ மகாநாடு. டயாபெடிஸ் பத்தி விவாதம். அப்போ முதல் வகுப்பு புக்கிங் ரூமுக்குப் போயிருந்தான். என்கொயரியில் ஒரு பெண் சாந்தமான முகத்தோடு, பழமை தோய்ந்த பெண்மையோடு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய முகமும், அவளுடைய பேச்சிலே இருந்த பண்பும் அடக்கமும் அவனை வெகுவாகக் கவர்ந்து விட்டன. பெங்களூருக்கு ரயில் ஏறுவதற்கு முன்னாலேயே இந்த சென்ட்ரல் ஸ்டேஷனிலேயே ஒரு தந்தி கொடுத்தான். என்னால் உடனே விமானம் ஏறி வர முடியவில்லை. முந்தாநாள் போயிங்கில் வந்தேன்....''

''அந்தப் பெண் பெயர் மங்களா...... என்னுடைய



பெண். இதைச் சொல்லுவதற்குத் தானே இத்தனை நேரம் பேசினீர்கள்?''

கணபதியின் வார்த்தைகளில் வெடித்த வெறுப்பை ஒரு சிரிப்பால் ஒதுக்கிய எம். தேவன், ''ஆமாம்... பிள்ளை வீட்டுக்காரன் பெண் கேட்டு வர்றது சம்பிரதாயம் இல்லைதான்.... இப்போதே சொல்லிவிடுகிறேன். எல்லாம் என் செலவு. ஆபட்ஸ்பரியில் நடக்கும். ஒரு வைர நெக்லஸ், வைர வளையல்கள், வைரத் தோடு...'' என்றார்.

''மன்னிக்கணும், மிஸ்டர் தேவன்! நான் ஒரு சாதாரண ரயில்வே அதிகாரி தான். ஆனாலும் கொஞ்சம் தன்மானம் உள்ளவன். நான் பிறத்தியாருடைய பணத்திலோ, ஆடம்பரத்திலோ மூளையைப் பறி கொடுக்கிறவன் இல்லை.''

''அப்போ எளிமையா நீங்கள் கல்யாணத்தை நடத்துங்கள். நான் 'ரிஸப்ஷனை'ப் பெரிசா நடத்துகிறேன்.''

கணபதி சிரித்தார்.

''உங்களுடைய தீர்மானத்துக்கு நான் சம்மதம் கொடுத்த மாதிரியே பேசிவிட்டீர்களே? மிஸ்டர் எம். தேவன், மன்னிக்கணும். என் பெண்ணுக்கும் உங்கள் பிள்ளைக்கும் கல்யாணம் நடக்காது...''

''ஏன் ஸார்... ஏன்?''

''எனக்கு இந்தச் சம்பந்தம் கட்டோடு பிடிக்கல்லே!''

''ஸார்! நீங்கள் வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் பேசுகிறீர்கள்.''

''அது என் சுபாவம்... எனக்கு ஆபீஸுக்கு நாழியாகிறது.''

''என் பையனுக்கு உங்க பெண்ணை ரொம்பப் பிடிச்சிருக்கு!''

''ஆனால் உங்க பையனை எனக்குப் பிடிக்கல்லையே!''

''மங்களாவிடமும் ஒரு வார்த்தை கேட்டு விடுங்கள். என் பிள்ளை கேட்டு நான் எதையும் கொடுக்காமல் இருந்தது இல்லை...''

''ஸார்! மிஸ்டர் எம். தேவன், உங்களுக்கு நிறையத் தொழிற்சாலைகளும் பணமும், தங்கக் கட்டிகளும் இருக்கலாம்... ஆனால் இன்னும் விவேகம் வரவில்லை... பக்குவம் வரவில்லை... நீங்கள் போகலாம். மன்னிச்சுடுங்கோ!''

எம். தேவன் எழுந்தார்.

புன்முறுவல் பூக்க நின்றார்.

''மிஸ்டர் கணபதி! உங்களுக்கு இதனால் ஏற்படுகிற நஷ்டத்தை இன்னும் நீங்க தெரிஞ்சுக்கல்லே!''

அடுத்த விநாடி அவர் வெளியேறினார்.

* * *

''அப்பா, அவர் போய்விட்டாரா?'' என்று கேட்டுக் கொண்டே மங்களா பிரவேசித்தாள். ரேணுகா பின் தொடர்ந்தாள்.

''ஒரு வழியா அனுப்பினேன். பெரிய சவடால் பேர்வழி!''

'''எம். தேவன், என் பையன் டாக்டர், எம். டி., கிளினிக்...' என்று நூறு தரம் ஒப்பிச்சிருக்குமே!'' என்றாள் மங்களா.

''உனக்குத் தெரியுமா?''

''நேத்து வந்தது, என்கொயரியில் என் பிராணனை வாங்கியது.''

''ஏன் முன்னாலேயே சொல்லலை?''

''என்னத்தைச் சொல்றது? கிறுக்கு!''

ரேணுகா இடைமறித்தாள்.

''உண்மையாகவே அந்த டாக்டர் நல்லவனா யிருக்கலாம். உன்னைப் பிடித்திருக்கலாம். அப்பா மூலமாக உன் அப்பாவைச் சந்தித்து, தன் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளுவதுதான் நியாயமான, தர்மமான முறை என்று எண்ணியிருக்கலாம்... ஏன் அவசரப்பட்டு அனுப்பி விட்டீர்கள்?''

''என் அப்பாவுக்கே எடுத்த எடுப்பில் பிடிக்கவில்லை...''

''யார் வந்திருந்தா? எது பிடிக்கவில்லை...? யாருக்குப் பிடிக்கவில்லே?''

சங்கரி கேட்டுக் கொண்டே வந்தாள்.

ரேணுகா விவரமாகச் சொன்னாள்.

''எவ்வளவு பெரிய பணக்காரனாக இருந்தால் என்ன? மங்களாவுக்குத்தான் ஏற்கெனவே ஒருத்தன் பிறந்தாச்சே!'' என்றாள் அவள்.

''யார் மாமி அது...? ஏண்டி மங்களா, என்னிடம் சொல்லவேயில்லே?'' என்று கேட்டாள் ரேணுகா.

''இப்போ அம்மாவே சொல்லுவாள். கேட்டுக்கொள்.''

''என் அண்ணா பிள்ளை.''

''ஆனால் அவனைப் பார்த்து ஒரு மாமாங்கத்துக்கு மேலே ஆயிடுத்து. வீட்டை விட்டு ஓடிப் போனவன். பகவானுக்குக்கூட அவனுடைய விலாசம் தெரியாது'' என்றார் கணபதி.

''ஏண்டி, அட்ரெஸ் தெரியாதவனா?'' என்று ரேணுகா கேட்டாள்.

''என் அம்மாவுக்கு நான் கன்னியா குமரி மாதிரி இருக்கணும்னு ஆசை. ஏம்மா ஏதாவது தெய்வத்திடம் வேறு வேண்டிக் கொண்டிருக்காயா?''

''ஏண்டி, கிண்டலாவா பேசுகிறீர்கள், நீயும் உன் அப்பாவும்? என் அண்ணா பிள்ளைக்கு என்ன குறைச்சல்...?''

''உன் அண்ணாவுக்குப் பிள்ளையா அவதாரம் செய்தானே, அதுதான் குறைச்சல்!'' என்றார் கணபதி.

''மாமி, உங்களுக்கு மாப்பிள்ளையை நானே தேர்ந்தெடுத்து விட்டேன். ரயில்வேயில் பெரிய அதிகாரி. ஆயிரத்துக்

# ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிட்டிகல் லாபரெட்டரீஸ்

(இந்திய அரசினரின் விவசாய, விநியோக ஆலோசகரின் அங்கீகார சான்றிதழ் பெற்றவர்கள்
இந்தியன் ஸ்டாண்டர்ட் நிறுவன உறுப்பினர்)

"ஸ்ரீ அம்மே நாராயண நிவாஸ்"
51, தம்பு செட்டித் தெரு
சென்னை -1




போன்: 20401/20402/20403
P. B. X. 3 லைன்கள்
தந்தி: "COCHUTNI"

## தரத்தை விரும்பும் நேயர்களுக்கு!

மிளகு, சீரகம், வெந்தயம் போன்ற சரக்குகள்: அரைவை செய்த சாம்பார் பொடி, ரசப் பொடி, கறிப்பவுடர் (மசாலாத் தூள்) முதலியன; புண்ணாக்கு வகைகள்; கொழுப்புகள் மற்றும் கடலை எண்ணெய், நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய், வெண்ணெய் நெய் போன்ற பால் பண்ணைப் பொருள்கள்; பெப்பர்மிண்ட்கள், கேக்; பிஸ்கத்துகள் வகையறா; தேன்; ஸ்குவாஷ்கள் கிரஷ்கள், கார்டியல்கள் போன்ற பான வகைகள்; ஜாம் ஜெல்லி மற்றும் மார்மலேட் போன்ற பழங்களிலாலான தயாரிப்புகள்; ஊறுகாய்கள்; நெல் மற்றும் தானியங்கள்; பருப்பு வகைகள்; சோடா பானங்கள்; பெருங்காயம் மற்றும் உணவுப் பொருள்களும், தின்பண்டங்களுக்கான கலர் வகைகள் முதலியவற்றையும் "அக்மார்க்" ஸ்டாண்டர்ட் மற்றும் I. S. I., F. P. O., கோட்பாடுகளுக்கு இணங்கவும், உணவு கலப்படத் தடை சட்டத்திற்கு ஏற்பவும் நவீன சாதனங்களுடன் கூடிய எமது ஆய்வுக் கூடத்தில் நிபுணர்களின் மேற்பார்வையில் பரிசோதித்து, தர அளவைகளுடன் அளிக்கிறோம்.

தங்களது விவசாயப் பண்டங்களின் தரத்தில் அக்கறைகொண்ட உணவுத் தயாரிப்பாளர்கள் மொத்த விற்பனையாளர்கள், சில்லரை வியாபாரிகள் அனைவருக்கும் எங்களது சேவை எப்பொழுதும் கிடைக்கும்.

கட்டண விபரங்களுக்கு எழுதவும்:

**R. N. ரமணி,** B. Sc.,
(மானேஜிங் புரொப்ரைட்டர் & டைரெக்டர்)

---

ஆரோக்கியத்திற்குச் சிறந்தது — பரிசோதித்த தண்ணீர்! கிணறு மற்றும் குழாய்களின் தண்ணீரைப் பயன்படுத்த சகல வசதிகளுடன் கூடிய எமது லாபரெட்டரியில் மிதமான கட்டணத்தில் பரிசோதனை செய்து உதவுகிறோம்.

---

# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர்

## ஆரோக்கியமும் மகிழ்ச்சியுமூட்டுவது

அஜீரணம், வாயு, தூக்கமின்மை, வாந்தி, வயிற்றுப் போக்கு போன்ற குழந்தையின் உடல் கோளாறுகளை விரைவில் குணப்படுத்துகிறது.
பசியைத் தூண்டி, ஜீரணசக்தியைச் சீராக்கி, குழந்தையை ஆரோக்கியத்துடன் கொழுகொழுவென்று வளரச் செய்கிறது.



அமிர்தாஞ்சன் லிமிடெட்




#DSAG-1660 TM

கும் மேலே சம்பளம். இதே சென்ட்ரல் ஸ்டேஷனில்தான் இருக்கிறன்'' என்றாள் ரேணுகா.

''கேதாரம் நன்னுத்தான் இருக்கான். நல்ல பிள்ளை மாதிரிதான் தோணறது. ஆனாலும், நான் என் அண்ணாவுக்கு, அவன் சாகறப்போ கொடுத்த வாக்கை மீற மாட்டேன்'' என்றாள் சங்கரி.

கணபதிக்கு ஒன்றும் புரியவில்லை. ரேணுகா என்ன சொல்கிறாள்? கேதாரம் மாப்பிள்ளையா?

''என்ன மங்களா? ரேணுகா என்ன சொல்கிறாள்...?''

மங்களா மென்று விழுங்கினாள்.

''வாடி போகலாம், உன் அப்பாவுக்கு ஆபீஸ் போக நேரமாயிடுத்து... மாமா! அதிக செலவு இல்லாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்... மாமி, மங்களா கன்னியா குமரியா யிருக்கிறதை விட அவளுடைய மாமா பிள்ளை, பிள்ளையாரா இருக்கிறது நல்லதுன்னு எனக்குத் தோண்றது. ரொம்பப் பேர் சாகிறதுக்கு முன்னாலே இப்படி ஏதாவது பேத்துவார்கள். நிதான புத்தியோடே பேசினார் உங்க அண்ணா என்று நீங்க நினைச்சு அங்கலாய்க்காதீர்கள்... வாடி, நேரமாயிடுத்து.''

''அட ஈசுவரா! இந்தக் காலத்துப் பெண்களை எப்படிச் சமாளிக்கிறது?''

சங்கரி நொந்து கொண்டாள்.

கணபதிக்குத் தலைசுற்றியது. ரேணுகா அப்படி வெட்டு ஒன்று துண்டு இரண்டாகப் பேசுகிறாள் என்றால் என்ன அர்த்தம்? கேதாரமும் மங்களாவும் ஒருவரை யொருவர் விரும்புகிறார்கள் என்று அர்த்தமா? இந்தக் காரணத்தினால்தான் விருந்துக்கு மங்களா வரவில்லையா? டிவிஷனல் என்ஜினியர் அவருக்கு மாப்பிள்ளையா? இது எப்படிச் சாத்தியமாகும்? எம். தேவனுடைய பிள்ளையைப் போலத்தானா கேதாரமும்? ஆனால் மங்களா பேச முடியாமல் தவித்தாளே? பிடிக்கவில்லை என்றால் நாத்தெறிக்கப் பேசுகிற மங்களா ஏன் மௌனமாக இருந்தாள்?

கணபதி குழம்பிப் போனார்.

''ஏன் பரப்பிரம்மம் மாதிரி நிற்கிறீர்கள்? என் அண்ணா பிள்ளையைத் தேடறதில் இப்போதிருந்தே ஜரூராக இருங்கள்... அவனைக் கண்டுபிடிச்சாகணும்!'' என்றாள் சங்கரி.

கணபதி மௌனமாக வெளியேறினார்.

* * *

**"மா**மா! இனிமேல் என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்!'' என்று கேதாரம் இரைந்தான்.

''என்னடா தொந்தரவு என்கிறே...? அபிதத்தைத்தான் வேண்டாம்னு சொல்லி, என் மானத்தை வாங்கிட்டே. சரி, ஒழிந்து போறது. இன்னிக்கு ஏன் அந்தக் கிராம்ப்டன் என்ஜினியர் பெண்ணை வேண்டாம்னு சொல்கிறாய்?'' என்று ஜம்புநாதன் சீறினார்.

''எனக்கு இஷ்டம் இல்லை.''

''பின் என்னதான் உன் இஷ்டம்?''

''என் கல்யாணத்தைப் பற்றி நானே ஒரு முடிவு செய்து கொள்ளுகிறேன்.''

''நீயே முடிவு செய்து கொள்கிறாயா? அல்லது முடிவு செய்தாகி விட்டதா?''

''எப்படி வேணுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்.''

''டேய்! உன் படிப்புக்கு நான் எத்தனை செலவு செய்தேன் தெரியுமா?... பதினாலாயிரம் ரூபாய்டா, பதினாலாயிரம்... நான் ரெண்டு பெண்களைப் பெத்து வைச்சிருக்கேன். ரெண்டு பெண்களடா, ரெண்டு பெண்கள்! மலை மலையா நிக்கறது.''

''அவர்களுக்கு நான் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கிறேன், மாமா!''

''செய்வேடா, செய்வே. நீ உனக்குத்தான் பார்த்துப்பே. என் பெண்களைச் செலவில்லாமல் கல்யாணம் செய்துக்க வருவான்கன்னு உன் நினைப்பா? மாங்கல்யத்துக்குக் கூட என்கிட்டே பணம் கிடையாது...''

''அப்போ, நான் ஒரு பெரிய இடத்தில் நீங்கள் சொல்கிற இடத்தில் கல்யாணம் செய்து கொண்டால், நீங்க அதிலே கிடைக்கிற வரதட்சணைப் பணத்தில் உங்க பெண்கள் கல்யாணத்தை நடத்தி விடலாம்னு திட்டம் போட்டிருக்கிறீர்கள்! இல்லையா?''

''ஏண்டா, இதை நான் அப்பட்டமா சொல்லியா நீ தெரிஞ்சுக்கணும்? உன் படிப்புக்கு நான் செலவழிக்கலேன்னு, அந்தப் பதினாலாயிரம் வட்டியும் குட்டியுமாகப் போட்டு இருபத்தையாயிரமா ஆகியிருக்குமே...? இதை யோசனை பண்ணிப் பார்த்தாயா?''

''இப்போ என்கிட்டே அவ்வளவு பணம் இல்லை, மாமா. ஆனால் ஏதாவது கடன் கிடன் வாங்கி, ஒரு பெண் கல்யாணத்தை நடத்தி விடலாம்.''

''நோ... நோ... ''

ஜம்புநாதன் கத்தினார்.

அதே சமயத்தில் அவசரம் அவசரமாக மணி நுழைந்தான்.

''என்ன ஸார்! பெண் பார்க்க மருமானைக் கூட்டிக் கொண்டு போக வந்திருக்கிறீர்களா? சொல்லேண்டா கேதாரம், சொல்லேன்.''

''என்னடா சொல்லப் போறே?''

''அவன் சொல்ல மாட்டான், ஸார். நான் சொல்றேன். மங்களா, மங்களான்னு ஒரு பெண் இருக்கா — எஸ். எஸ். கணபதியின் பெண்... இன்னமே சொல்லேண்டா, கேதாரம்.''

''கணபதியாடா? பதினொரு குழந்தைகளைப் பெத்தவன். தன் பெண்ணுக்கு என்னடா செய்வான்? அவன் வாங்குகிற சம்பளம் அரிசி வாங்கறதுக்கே போறுது. பெண் கையிலே கண்ணாடி வளையல்தான் போடுவான்...''

''அது போறும்னு கேதாரம் தீர்மானம் பண்ணினால் நீங்க என்ன ஸார் செய்ய முடியும்? ஏண்டா கேதாரம் நான் சொல்றது சரிதானே?''

''நான் இப்போதே அந்த எஸ். எஸ்.ஸைப் போய்ப் பார்க்கிறேன். அவன் இதற்குத்தானா உன்னைக் கதாகாலட்சேபத்துக்கு அழைத்துக் கொண்டு போனான்? தன் வீட்டிலேயே உனக்கு விருந்து வைத்தான்? சிப்பா ஒரு மாப்பிள்ளையைப் பிடிக்கிறானே?'' ஜம்புநாதன் கறுவினார்.

''ஸார்! இன்னமே நீங்கள் என்ன கத்தியும் புண்ணியமில்லை. நீங்கள் பெரியவர், அநுபவஸ்தர்... முடிஞ்சா நீங்களே கணபதியிடம் இதமாகப் பேசி எவ்வளவு கறக்க முடியுமோ அவ்வளவும் கறந்து விடுங்கள்'' என்றான் மணி.

ஜம்புநாதன் பற்களை நறநறவென்று கடித்தார். கணபதி கண் முன்னால் தோன்றினான். இந்தக் கணபதி இன்னும் சில வருடங்களில் ரிடையராகிவிடுவான். சம்பளத்திலேயே குடும்பத்தை நடத்த முடியாத அவன் இன்னும் சில வருடங்களில் மனைவியுடன் குத்தாலம் ஆசிரமத்துக்கே வந்தாலும் வருவான். இப்பேர்ப்பட்டவனுடைய பெண்ணா அவருடைய தங்கை பிள்ளையின் மனைவி!

கேதாரமும் மணியும் மௌனமாக நின்றுகொண்டிருந்தார்கள். ஜம்புநாதன் தமக்குள்ளேயே முணுமுணுப்பதையும், கண்களை மூடிக் கொண்டு யோசிப்பதையும் பார்த்து ரசித்தார்கள். திடீரென்று ஜம்புநாதன் கண் திறந்தார், எழுந்தார். கைப் பையை எடுத்துக் கொண்டார்.

''டேய், கேதாரம்! நீ இன்னிக்குப் பெரிய அதிகாரியாக இருக்கலாம். பெரிய மரமாக வளர்ந்திருக்கலாம். ஆனால் அடிநாளிலிருந்து அதுக்குத் தண்ணீர் ஊற்றினவன் நான். இதை நீ மறக்கக் கூடாதுடா, மறக்கக் கூடாது. இனிமேல் நீ எந்தச் சனியன் கழுத்திலே தாலி கட்டினாலும் நான் ஏன்னு கேட்கப்போறதில்லை... ஆனால், ஒண்ணு. நீ மணையிலே உட்கார்றத்துக்கு முன்னாடி என்னோட ரெண்டு பெண்கள் கல்யாணத்துக்குப் பதினைஞ்சாயிரத்தை

## குமாரி அனிதா



பம்பாய் ஸ்ரீ ராஜராஜேசுவரி பரதநாட்டிய கலாமந்திர் ஆதரவில் குமாரி அனிதா, பிர்லா மாதுஸ்ரீ சபாகர் ஹாலில் பரத நாட்டிய விருந்தளித்தாள். பதின்மூன்றே வயதான சிறுமி அனிதா கீமைஸர் ஸ்தாபனத்தைச் சேர்ந்த திரு எஸ். பி. பிள்ளை அவர்களின் குமாரி. ரசிகர்களின் பாராட்டுதல்களைப் பெற்ற குமாரி அனிதாவின் குரு ஸ்ரீ மகாலிங்கம் பிள்ளை.



## 'க்ரைட்டீரிய'னுக்குப் பரிசு

சென்னை மவுண்ட்ரோட் கல்யாணி அரங்கில் நடந்த விழாவில் தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் சார்பில் ஸ்ரீமதி தயாளு கருணாநிதி க்ரைட்டீரியன் பப்ளிஸிட்டீஸ் மானேஜிங் டைரக்டருக்கு அந் நிறுவனத்தின் சேவையைப் பாராட்டிப் பரிசு வழங்கினர்.

நோட்டா என் காலடியிலே வைக்கணும். உனக்கு நான் செலவு செய்த பணம். நீ பட்டிருக்கிற கடன்... அதைத் தீர்க்காமல் நீ எப்படி அந்தப் பெண்ணின் கழுத்திலே தாலி கட்டறேன்னு நான் பார்த்துடறேன்.''

ஆத்திரத்தோடும் ஆங்காரத்தோடும் வெளிவந்த வார்த்தைகளைக் கேட்டுக் கேதாரம் ஒரு கணம் பயந்தான்.

ஆனால் மணி தனக்கே உரித்தான துடுக்குடன், ''கேதாரம்! கவலைப் படாதே... நீ மணையில் உட்கார வேண்டாம்... ரிஜிஸ்டிரார் ஆபீஸில் நாற்காலியில் உட்காரு...'' என்றான்.

''ஏண்டா, கேலியா பண்ணறே நீ... கேலி! நீதாண்டா இதுக்கெல்லாம் காரணம்... நீதான் காரணம்...''

''எப்படி சார் தெரிந்தது உங்களுக்கு?''

ஜம்புநாதன் அடுத்த விநாடி விர்ரென்று வெளியேறினார்.

''இருடா, வர்றேன்.''

மணி பின்னாலேயே பின் தொடர்ந்தான். ''ஸார்! கொஞ்சம் பதற்றப்படாமல் இருக்கிறீர்களா?''

''வழியை விடுடா, பிரம்மஹத்தி!''

''நான் ஒரு வழி சொல்றேன்.''

''உன்னை நான் அறைஞ்சுடுவேன்.''

''உங்க கைதான் வலிக்கும், நீங்க கேட்டது எவ்வளவு? பதினைந்தாயிரம். உங்களுக்குக் கிடைக்கும்...''

''பெரிய வள்ளல்! போடா உன் வழியைப் பார்த்துக்கொண்டு!''

''இப்போ எங்கே போகிறீர்கள் சார்? கணபதியிடமா? கிராம்ப்டன் என்ஜினியரிடமா? நீங்கள் என்ன வியாபாரம் சார் பண்ணுகிறீர்கள்?... கேதாரம் படிச்சது முழுக்க முழுக்க ஸ்காலர்ஷிப்பில். நீங்க பைசா செலவழிக்கவில்லை. உங்க வீட்டு மாமி சுடற சோத்தை அவன் கண்ணிலே காட்டினதே யில்லை. வியவகாரம்னு வந்தால் நான் உங்களுக்கு மேலே பேசுவேன்... உங்க குத்தாலம் ஆசிரமத்திலே என்ன நடக்கிறது? கிடைக்கிற நன்கொடையெல்லாம் எப்படிக் கணக்கிலே வராமல் தனியா ஒதுங்கி ஒளிஞ்சு நிக்கிறதுன்னு எனக்கு எல்லாம் தெரியும். ஆசிரமம்னு வந்தால் அது பிரைவேட் இன்ஸ்டிடியூஷனாயிருந்தாலும் கேள்வி கேட்க நாலு பேர் வருவா. நானே நாலு பேரைக் கூட்டிக் கொண்டு வந்து நிற்பேன்...இப்ப சொல்லுங்கோ...எத்தனை வேணும்? பதினைந்தாயிரம்... சரி...''

''டேய், மணி!''

''நான் இன்னும் உரக்கக் கத்துவேன். கத்தட்டுமா?''

''வழியை விடுடா.''

''அவன் தாலியைக் கட்டறபோது குறுக்கே நிற்பீர்களா?'' மணி சிரித்தான்.

ஜம்புநாதன் மேலே நடந்தார். இந்தப் பயல் மிரட்டுகிறானா, அல்லது உண்மையிலே குத்தாலம் ஆசிரமத்தைப் பற்றி எல்லா உண்மைகளும் தெரியுமா? அடுத்த விநாடியே புதுத் தெம்பு பிறந்தது. பணத்தை அள்ளிக் கொடுத்தவர்களே இதுவரை வாய் திறந்து எதையும் கேட்கவில்லை. இந்தப் பொடிப் பயலால் என்ன செய்ய முடியும்?

**ம**ணி நேரே என்கொயரிக்குச் சென்றான். ''உன் சிநேகிதி எங்கே?''

''உனக்கு எப்படித் தெரியும் ரேணுகாவைப் பற்றி?''

''இன்னிக்குக் கார்த்தாலே பம்பாய் மெயிலில்வந்தான்.நீயும்கேதாரமும்காத்துக்கொண்டிருந்தீர்கள். முத்து பெட்டியைத் தூக்கிக் கொண்டு நடந்தான்.''

''முத்து அவனுக்குக் கஸின்.''

''பாவம்.''

''யார் பாவம்?''

''உன் சிநேகிதி.... என்ன பேர் சொன்னே? ரேணுகா! அவள் எங்கே?''

''மாம்பலம் போயிருக்கிறாள்.''

''நல்லது. எட்மண்டுக்கு வேலை கிடைக்குமா?''

''நீ முந்திக் கொண்டு விட்டாய். என்னிடம் சொல்லி யிருக்கலாம்...''

''சொல்லி யிருந்தால் உனக்கு ஒரு சந்தர்ப்பம் இல்லாமல் போயிருக்கும்!''

''என்ன உளர்றே?''

''எட்மண்டை முகாந்திரமாக வைத்துக்கொண்டு...''

''நான்சென்ஸ்...''

''இப்போ எல்லாம் 'சென்ஸா' ஆயிடுத்து...இன்னிக்குக் கேதாரம் கிராம்ப்டன் என்ஜினியர் பெண்ணைப் பார்க்கப் போகவில்லை...''

''எனக்கு அக்கறை யில்லே!''

''மிஸ் மங்களா! இனி நீ வேஷத்தைக் கலைக்கலாம்... உனக்குத் தெரிஞ்சதைவிட எனக்கு அதிகம் தெரியும்.''

''தெரிஞ்சா நீ உனக்குள்ளேயே வைத்துக் கொள்... நானைக்கு விருந்து இருக்கு... வராமலிருந்து விடாதே...''

''வரத்தான் போறேன். ஆனால் அப்பாகிட்டே சொல்லி எப்படியாவது ஒரு பதினைந்தாயிரம் ரூபாய் ஏற்பாடு செய்யச் சொல்லு. இல்லாவிட்டால் கேதாரத்தின் மாமா ஜம்புநாதன் அவனை இலேசில் விடமாட்டார்... அவனுடைய கல்யாணம்... மேலே எனக்குச் சொல்லப் பிடிக்கவில்லை.''

ஒன்றும் புரியாமல் மங்களா விழிக்க, மணி விடைபெற்றுக் கொள்ளாமலே திரும்பி நடந்தான். (தொடரும்)











## அங்கே அப்படி...!

லண்டனில் விக்டோரியா என்ற பாதாள ரயில் ஸ்டேஷனில் ரயில் வந்து நின்றதும் உள்ளே ஏறி உட்கார்ந்தார் ராபர்ட் என்பவர். உடனே பிளாஸ்கில் இருந்த தேநீரை டம்ளரில் ஊற்றிக் குடிக்கப் போனார். அதற்குள் பலத்த குலுக்கலுடன் ரயில் கிளம்பி விட்டது. அந்தக் குலுக்கலின் அதிர்ச்சியில் அவர் கையில் வைத்திருந்த டீ அவருடைய கோட், பாண்ட் எல்லாம் சிந்தி உடைகளெல்லாம் பாழாகி விட்டன. அருகிலிருந்த ஒரு டிக்கட் பரிசோதகர் ராபர்ட்டிடம் வந்து ஆறுதல் வார்த்தைகள் கூறி, அவருடைய முகவரியையும் வாங்கிக் கொண்டார். பிறகு ''உங்களுக்குத் தகவல் வரும்'' என்று கூறி விட்டுப் போய்விட்டார். ராபர்ட் அன்றோடு அந்தச் சம்பவத்தை மறந்துவிட்டார். சில நாட்களுக்குப் பிறகு பிரிட்டிஷ் ரயில்வே இலாகாவிடமிருந்து அவருக்கு ஒரு மன்னிப்புக் கடிதம் வந்தது. அது மட்டுமல்ல, அன்று பாழாகிவிட்ட அவருடைய உடைகளுக்கு நஷ்டஈடாக 600 ரூபாய்க்கு ஒரு செக்கும் அந்தக் கடிதத்துடன் இணைக்கப்பட்டிருந்தது!

ஆதாரம்: ''டிட்பிட்ஸ்''

தகவல்: சரோஜா ராமச்சந்திரன்



ஐம்பது வருடங்களுக்கு முன்பு கடை திறந்த ஒருவர் முதன் முதலாக வந்த பத்து ரூபாய் நோட்டை ஒரு ரூபாய் செலவு செய்து அழகாகப் பிரேம் செய்து கடையில் மாட்டி வைத்தார். இப்பொழுது அந்தப் பத்து ரூபாய் நோட்டின் மதிப்பு ஒரு ரூபாய். ஆனால் ஒரு ரூபாய்க்கு வாங்கிய பிரேமின் மதிப்பு பத்து ரூபாய்.

'மேனன்' - பாபு.

''ஆமாம், இன்னும் எத்தனை நாட்களுக்கு இப்படி நாம் பஸ் ஸ்டாண்டிலேயே காதலித்துக் கொண்டிருப்பது?''

''எவ்வளவு நாட்களா? பைத்தியமே! நம்ப சர்வீஸ் இன்னும் அவ்வளவு மட்டமாக மாறவில்லை. இன்னும் சில மணி நேரத்தில் பஸ் வந்துவிடும். ஏறிண்டு போயிடலாம்.''

- பிட்டு



நியூட்டன் ஆராய்ச்சியில் மூழ்கியிருந்த சமயம் அவரது நண்பர் வந்தார். சாப்பாட்டு நேரம். நியூட்டனின் வேலையாள் வந்தவரைச் சாப்பாட்டு அறையில் உட்கார்த்தி உணவு படைத்தார். வந்தவருக்கு நல்ல பசி. உணவை உண்டுவிட்டு நியூட்டனுக்காகக் காத்திருந்த போது அவரும் வந்தார். வந்தவர் நேரே மேசையருகில் சென்று, ''சாப்பாட்டை முடித்துவிட்டுப் பிறகு பேசுவோம்'' என்று நண்பரிடம் கூறிவிட்டுத் தட்டுக்களைத் திறக்கவும், அதில் உண்ட மிச்சமே இருந்தது.

பலமாக நகைத்த நியூட்டன், ''எனது ஞாபக மறதிக்கு ஈடோ இணையோ இல்லை. சாப்பிட்டுவிட்டு அதை மறந்து மறுபடியும் சாப்பிட வருகிறேன்'' என்று உரக்கச் சொன்னார்.

''இல்லை இல்லை. உங்களுக்காக வந்த உணவை நான் சாப்பிட்டு விட்டேன். இதோ உங்களுக்காக வேறு உணவு வருகிறது'' என்று உணவோடு வரும் வேலையாளைக் காட்ட, ''அப்படியானால் இது வரை நான் சாப்பிடாதது உண்மைதானா?'' என்று கேட்டபடியே சாப்பிட ஆரம்பித்தார் நியூட்டன்.

-- ''தேஜ்''

# உங்கள் அசல் + வட்டிக்கு தமிழ்நாடு அரசு உத்தரவாதம்



# பிக்ஸெட் டிபாஸிட்டுகள்

கீழ்க் குறித்தவாறு மிகக் கவர்ச்சிகரமான சிறப்பு வட்டி விகிதங்கள் அளிக்கப்படுகின்றன:

| | வருடத்துக்கு |
|---|---|
| 12 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 24 மாதங்களுக்குக் குறைந்து | 6% |
| 24 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 36 மாதங்களுக்கு மேற்படாமல் | 6½% |
| 36 மாதங்களுக்கு மேல், ஆனால் 60 மாதங்களுக்கு மேற்படாமல் | 7% |
| 60 மாதங்களுக்கு மேல் | 7¼% |

## குறைந்தபட்சம் ஏற்கப்படும் டிபாஸிட் ரூ. 1000/-



**தி தமிழ்நாடு இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்.**
எல். எல். ஏ. கட்டிடம், 150-A, மவுண்ட் ரோடு, சென்னை-2.

**டி ஐ ஐ ஸி**
இதயபூர்வமான நிதியுதவி



டி. ஆர். தரணிதரன்,
செயலாளர்.

கிளைகள்: 1231, தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர் • 247, நாயக்கர் புதுத்தெரு, மதுரை.
'பால நிலையம்' 6/37, ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயம்புத்தூர்-18.

Criterion TIIC 2606

காற்றில், உடைகள் சலசலக்க, அந்தப் பெரிய மாளிகையின் முன் சீராக அமைக்கப்பட்டிருந்த புல்வெளியில் அமர்ந்திருந்தேன்.

மரகதப் பாய்போல் படர்ந்திருந்த அந்தப் பசும் புல்லின் மேல் நிலவு ஒளி படும்பொழுது ஆங்காங்கே வைரமாக மின்னியது. அந்தத் திறந்தவெளியின் அமைதியும், தனிமையும் மனத்துக்கு மகிழ்ச்சியைத் தந்தன.

இந்தக் கட்டடத்தைப் பயணிகள் விடுதியாக மாற்றப் போகிறார்களாம். எந்த ஜமீந்தாருக்கோ உரிமையாக இருந்த இந்தப் பெரிய பங்களா இப்பொழுது கலகலப்பே இல்லாமல் இருந்தது.

என்றோ, யாராவது வரும்பொழுது பங்களாவில் ஒரு கலகலப்பு இருக்கும். இல்லையாயின் இணையில்லா அமைதிதான்.

காவலுக்காக இருந்த கூர்க்கா, தன் சகாக்களுடன் அங்கு ராஜபரிபாலனம் செய்து கொண்டிருந்தான். மாளிகையைச் சுற்றிப் புல்லும் மற்றச் செடிகளும் புதராக மண்டியிருந்த தோட்டத்தில், மலரும் மலர்களுக்கும் பழுக்கும் கனிகளுக்கும் ஏகபோக உரிமையை அவன்தான் அநுபவித்துக் கொண்டிருந்தான்.

இந்தத் தடவை விடுமுறை எடுத்துக் கொண்டதும் ஆக்ராப் பகுதிகளை நன்றாக அலசிப் பார்த்துவிட வேண்டும். அதுதான் விடுமுறையை நன்றாகக் கழிக்கும் விதமாகும் என்று நானும் நெருங்கிய நண்பர்கள் இருவருமாகத் தீர்மானித்தோம். அதைச் செயலாக்கும் வகையில் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டோம்.

என் நண்பர்கள் சங்கரும், ஜகனும் ஆராய்ச்சியில் அதிக ஆர்வம் உள்ளவர்கள். சங்கர் சரித்திர ஆராய்ச்சி செய்வான். ஜகன் ஆருடம், ஜோசியம், ஆவிகளை வரவழைத்துப் பேசுதல், நிழல் விளையாட்டு போன்றவைகளைக் கருதி மீட்டிப் பார்ப்பான்.

அவர்கள் இருவரும் தங்கள் இல்லத்தரசிகளோடு வந்திருந்தனர். கல்லூரி வாழ்க்கைக்குப் பிறகு பல வருடங்கள் கழித்துக் கிடைக்கும் இந்தச் சந்தர்ப்பத்தை மிக அருமையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற துடிப்பு எங்கள் ஒவ்வொருவரிடமும் இருந்தது.

இந்தப் பிரயாணத்தை முழுமையாகச் சுவைத்து ரசிக்க வேண்டும் என்றே காரில் புறப்பட்டோம்.

நாங்கள் காரில் செல்கிறோம் என்றதும், பலரும் பலவித அபிப்பிராயங்களைச் சொன்னார்கள். இது ஒரு பயங்கர முயற்சி. 'ஆயிரம் மைல் தூரம் காரில் போவதா?' என எங்களைக் கண்டித்தவர்களும், பரிகசித்தவர்களும் உண்டு. ஆனால் நாங்கள் அவர்கள் பேச்சை யெல்லாம் காதில் போட்டுக்கொள்ளவில்லை.

சங்கரின் மனைவி சரளா அருமையான தின்பண்டங்களைத் தயாரித்துக் குவித்தாள். ஜகன் மனைவி நந்தினி பார்க்க வேண்டிய இடங்களின் வரலாறுகளை யெல்லாம் சேகரித்துப் பயணத்தின் பொழுது கதையாக அவைகளைக் கூறி வந்தாள்.

சென்னையிலிருந்து அவ்வளவு தூரம் காரில் பிரயாணம் செய்த அலுப்பே தெரியாதவண்ணம் அவள் கூறிய கதைகள் சுவாரஸ்யமாயிருந்தன.

சரளா விநியோகித்த தேந்திரங்காய் வறுவலைச் சுவைத்துக் கொண்டே, நாங்கள் அந்தப் புல்வெளிப் பிரதேசத்தை ரசித்தவண்ணம் அமர்ந்திருந்தோம். நான் உடம்பை ஒரு முறை சிலிர்த்துக் கொண்டேன். நிமிர்ந்து நிலவைப் பார்த்தேன். ஒளி பாலாகப் பொங்கிக் கொண்டிருந்தது.

''ஆழ்ந்த சிந்தனையா ரகு?'' என்று கேட்டுக்கொண்டே அருகில் வந்து அமர்ந்தான் சங்கர்.

''நிலவின் அழகையும் நம் பிரயாண அநுபவங்களையும் நினைத்துக் கொண்டிருந்தேன். நாம் எத்தனை அழகான இடங்களைப் பார்த்து விட்டோம்! மறக்கவே முடியாது இந்தப் பயணத்தை !'' என்றேன்.

''எல்லாவற்றிலும் சிறந்தது, [illegible] இன்று ஓரளவு பார்த்துவிட்டு வந்தி[illegible] ராதாஸ்வாமி கோயில்தான்!'' எ[illegible] சங்கர்.

''ஆக்ராவிலிருந்து நான்கு மைல் [illegible] இருக்குமா?'' என்று கேட்டாள் சரளா.

''அவ்வளவுதான் இருக்கும். அதைத் தாஜ்மகலுக்குச் சவாலாக அல்லவா கட்டுகிறார்களாம்! அது முடிந்த பிறகு பார்த்தால் தாஜ்மகல் இரண்டாவது இடமாக ஆகிவிடும் என்று சொல்கிறார்கள்'' என்றான் ஜகன். ''நந்தினி, அதைப் பற்றிக் கொஞ்சம் விளக்கமாகக் கூறேன்'' என்றான் ஜகன் மனைவியைப் பார்த்து.

அவள் தலையைக் குனிந்து கொண்டு புல் தரையை விரல்களால் கோதிக் கொண்டிருந்தாள்.

''மிஸஸ் ஜகன், நாங்கள் சீரியஸாகத்தான் கேட்கிறோம். சற்றுச் சொல்லுங்களேன்'' என்றேன் நான்.

''அதுதான் நம் வழிகாட்டி, மிஸ்டர் பிரதாப் வருவதாகச் சொல்லியிருக்கிறாரே, வந்ததும் கேட்டுக் கொள்ளுங்களேன்'' என்று மெல்லிய குரலில் நந்தினி பதிலுரைத்தாள்.

''அவரைக் கேட்க விஷயங்களா இல்லை? நீ சொல்வதையும், அவர் சொல்வதையும் கேட்டுக் கொண்டு நாளைக்கு மற்றப் பகுதிகளைப் பார்க்க வேண்டும்'' என்றான் ஜகன்.

''இன்று நாம் பார்த்தது கால் பாகம்கூட இல்லை என்றுதான் தோன்றுகிறது'' என்றாள் சரளா.

ஆமோதிப்பதுபோல் தலையை ஆட்டிய நந்தினி, ''இந்த ராதாஸ்வாமி பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராம். அவர் மறைந்ததும் அவருடைய சீடர்கள், அவர் சமாதியின் மேல் இணையில்லா எழில்கொண்ட ஆலயம் ஒன்றை நிர்மாணிக்க முற்பட்டனர். அப்படித் திட்டமிட்ட கட்டடம்தான் இது. 1904ஆம் ஆண்டு இதனைக் கட்டத் தொடங்கினார்கள். இது கட்டி முடிய இன்னும் நாற்பது ஆண்டுகள் ஆகும் என்றும் கணக்கிட்டிருக்கிறார்கள்'' என்றாள்.

''என்ன! இது முடிவடைய இன்னும் நாற்பது ஆண்டுகளா? அடேயப்பா! இது முடி





- சிட்சார்த்தி

வடைந்து பார்க்கும் மக்களும், சிற்பிகளும் பாக்கியம் செய்தவர்கள்தான்!'' என்றாள் சரளா.

''நூறு ஆண்டுகளுக்கு எடுத்துக் கொண்ட முயற்சியா? நினைக்கவே பிரமிப்பாயிருக்கிறதே! அப்படியானால், இந்த ஆலயத்தில் அமைந்திருக்கும் பலவிதமான சிற்பங்களும் வேறுபட்ட பல நாகரிகங்களின் பிரதிபலிப்பாக இருக்கும் என்றே தோன்றுகிறது'' என்றேன் நான்.

''சந்தேகமென்ன அதில்? அந்த ஒரு பகுதியில் செதுக்கியுள்ள நடன மாதர்களின் முகங்கள் ஒரே சாயலாக இருக்கின்றன. நீ கவனித்தாயா? அவை அத்தனையும் ஒரே சிற்பியின் கைத்திறனாகத்தான் இருக்கும் என்று நான் நினைக்கிறேன்.....'' என்றான் சங்கர்.

''ஒரே சிற்பி என்பது மட்டும் அல்ல, சங்கர். அந்தச் சிற்பியும் ஒரு குறிப்பிட்ட பெண்ணை மாடலாக வைத்துத்தான் இந்தச் சிற்பங்களை வடித்திருக்க வேண்டும் என்றும் நான் நினைக்கிறேன்'' என்றான் ஜகன்.

இதற்குள் வழிகாட்டி பிரதாப்பும் வந்து சேர்ந்தார். பிரதாப் ஆர்வம் மிகுந்தவர். இடங்களைப் பற்றி அவர் விவரித்த விதமே எங்கள் ஆவலை அதிகரிக்கச் செய்தது என்றால் மிகையாகாது.

''உட்காருங்கள், மிஸ்டர் பிரதாப்! சரியான சமயத்தில் வந்தீர்கள். நாம் பார்த்தோமே, ராதா ஸ்வாமி கோயில், அதில் காணப்படும் நடன நங்கைகளின் சிற்பங்கள் ஒரே மாதிரியான முக ஜாடையோடு இருக்கின்றனவே? அந்தச் சிற்பி ஒரு குறிப்பிட்ட பெண்ணை மாடலாக வைத்துச் செய்தாரோ? அதைப் பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?'' என்று ஆவல் பொங்கக் கேட்டேன்.

பிரதாப் எங்களை நிமிர்ந்து ஒரு முறை பார்த்தார். பிறகு, குனிந்து புல்லை வருடியவாறே, ''சாதாரணமாக இங்கு வரும் பயணிகளுக்கும் உங்களுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கத்தான் செய்கிறது. அநேகமாக எல்லோரும் சிற்பங்களைப் பார்த்துப் பொதுவாக ரசித்து ஆனந்தப்பட்டுச் செல்வதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் நீங்களெல்லாம் அப்படியில்லை. ஆராய்ச்சிக் கண்ணோடு எதையும் பார்க்கிறீர்கள்'' என்றார்.

''இதில் தவறு ஏதும் இல்லையே! எதையும் தெளிவாகத் தெரிந்து கொண்டு விடுவது நல்லதுதானே?'' என்றேன்.

பிரதாப் என்னை ஆமோதிக்கும் வகையில் பலமாகத் தலையை ஆட்டினார். ''பல ஆண்டுகளாகத் தொடர்ந்து வேலை நடந்து கொண்டிருக்கும் இந்த ராதாஸ்வாமி கோயிலில், திருப்பணி செய்த சிற்பிகளைப்பற்றிப் பலவிதக் கதைகள் உண்டு. அவர்களுடைய காதல், அன்பு, ஆணவம், வைராக்கியம், சபதம் என்ற பல உணர்வுகளும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. கட்டட வளர்ச்சியோடு அத்தகைய கதைகளும் வளர்ந்துதான் இருக்கின்றன. எனக்குத் தெரிந்தவற்றைச் சொல்கிறேன்'' என ஆரம்பித்தார்:

''நீங்கள் சொன்னீர்களே, அந்தச் சிலைகளைச் செய்தவர் காசிநாத் என்பவர். அவருக்கு முன்னும் சரி, பின்னும் சரி, அத்தகைய சிற்பக்கலையின் கை தேர்ந்த சிற்பி இருந்ததாகக் கூறவே முடியாது.

இளைஞர் காசிநாத் கற்பனைத் திறனிலும், சிற்பங்களை வடிக்கும் அழகிலும் இணையில்லாதவர். அவர் வடித்த சிற்பங்கள் அழகைக் கொட்டின. குலுங்கி வளைந்து நம்முடன் பேசத் தயாராக இருப்பதுபோல் தோன்றின. எத்தனை மணி நேரம் நின்று பார்த்தாலும், சலிப்படையச் செய்யாத படைப்புக்கள் அவை.

இந்தச் சம்பவம் நடக்கும்பொழுது காசிநாத்துக்கு இருபத்து மூன்று வயது இருக்கலாம். அவனை பார்ப்பதற்கு மிக அழகாக இருப்பான். வாட்ட சாட்டமான அவன் உருவமும், சிவந்த மேனியும், சுருள் கேசமும் பாவையரின் பார்வையைச் கண்டி இழுத்தன.

நாட்டியக் கலையில் அவனுக்கு அளவுக்கு மீறிய பற்றுதல். தானே அருமையாகப் பாடல்களையும் புனைவான்.

வேலை நேரத்தைத் தவிர மற்ற நேரங்களில் காசிநாத்தை ராதாஸ்வாமி கோயிலுக்குச் சமீபமாக உள்ள யமுனை நதிக் கரையில்தான் பார்க்கலாம். சலசலவென்று வெள்ளியை உருக்கிவிட்டது போல் ஓடும் அந்த நதியின் அருகில், அழகாகப் பவனி வரும் மேகக் கூட்டங்களையும், பறவைகளையும் பார்த்துக் கொண்டு கவிதைகள் புனைவது அவன் வழக்கம்.

அம்மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில் அவன் ஷோபாவைச் சந்தித்தான். பெயருக்கு ஏற்ற வாறு மிகவும் சோபையான எழில் நிறைந்தவளாக இருந்தாள் அவள். தோழிப் பெண்கள் புடைசூழ அவள் நதிக் கரைக்கு வந்திருந்தாள். அழகுத் தெய்வம் தன் திறனையெல்லாம் காட்ட ஓர் உருவத்தை வடித்ததோ? அவளைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் போல் அவனுக்கு ஓர் உணர்வு.

அவளது பொன்னிற நெற்றியில் ஊஞ்சலாடும் சுருள் கேசங்களும், சிவந்த உதடுகளும், குறுகுறுத்த கண்களும், எடுப்பான நாசியும் அவனைச் சிந்தை இழக்கச் செய்தன.

'எத்தனை நாட்கள் பாடுபட்டாலும், மிகுந்த அக்கறை காட்டினாலும், இப்படி ஓர் உருவத்தை நம்மால் படைக்க முடியுமா?' என்ற எண்ணமே அவன் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டது.

யமுனை நதிக் கரையை இது நாள் வரையில் இன்பச் சலசலப்புக்காக நாடியவன், இந்தக் கட்டழகியைத் தரிசிக்கவே தினசரி குறிப்பிட்ட நேரத்தில் அங்கு போவதை ஒரு வழக்கமாகவும் கொண்டான். தேவியை ஆராதிக்கச் செல்லும் பக்தனைப் போல், கடவுளின் சிறந்த எழிற் படைப்பைத் தரிசிக்கும் ஆவலிலேயே அவனுடைய அன்றைய மன நிலை இருந்தது.

'அழகு மயில் கூட்டங்களும், மான் கூட்டங்களும் மனிதர்களைக் கண்டால் சிதறி ஓடிவிடுவதைப் போல்தான் இந்தப் பெண்கள் கூட்டமும். ஆகையால் நாம் அவர்களைக் கவனிப்பதையே காட்டிக் கொள்ளக் கூடாது' என்ற எண்ணத்தில், அவர்கள் கண்களில் படாமலேயே ரசித்து வந்தான். கலகலவென்ற நகைப்பொலியோடு, காலின் கொலுசு மணிகள் இனிய நாதம் எழுப்ப அவர்கள் ஒயிலாக அவன் இருக்கும் இடத்தைக் கடக்கும் பொழுது, தேவதைகள் எல்லாம் ஒருமித்து வாத்தியங்கள் இசைத்துக் கொண்டு செல்வதைப் போலவே அவன் நினைப்பான். அவர்கள் சென்ற பிறகும்கூட அவன் காதில் அந்த இனிய ஓசை வெகுநேரத்துக்கு ஒலித்துக் கொண்டேயிருக்கும்.

நாட்கள் சில, இந்த எழிலரசியைப் பார்வையினால் ரசிப்பதிலேயே சென்றன.

விசேஷ தினங்களிலும், விடுமுறை நாட்களிலும் மக்கள், பொழுதுபோக்குக்காகச் செல்லும் இடங்களில் ராதாஸ்வாமி கோயிலும் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. கும்பல் கும்பலாக மக்கள் சிற்பிகள் வடிக்கும் சிலைகளைக் கண் கொட்டாமல் பார்த்துக் களிப்பர்.

அப்படி ஒரு நாள் வந்த கூட்டத்தில் அந்த அழகியும் இருந்தாள். காசிநாத் முதலில் அவளைக் கவனிக்கவில்லை. தன் வேலையில் ஆழ்ந்து ஈடுபட்டிருந்தான் அவன்.

ஒரு சிலையின் நுண்ணிய வேலைகளை முடித்து விட்டுத் திரும்பினான் காசிநாத். அவன் கண்கள் அருகில் உள்ள தண்ணீர்த் தேக்கத்தில் பதிந்தன. ஷோபாவின் அழகிய உருவம் மட்டும் தனித்து அதில் பிரதிபலித்தது.... அதைப் பார்த்ததுமே, அப்படியே கல்லில் அதை வடித்துவிட வேண்டும் போல் ஓர் ஆவல், துடிப்பு அவனிடம் ஓங்கியது. அதே வேகத்தில் வடிக்கவும் முற்பட்டான்.

பல மணி நேரங்கள் பறந்தன. தண்ணீரில் பிரதிபலித்த உருவம் அழகாகச் சலவைக் கல்லில் அற்புதமாக உருப்பெற்றது. அதனை ஓரளவு செதுக்கிய பிறகுதான் 'தண்ணீரில் எப்படி இந்த உருவம் பிரதிபலிக்கிறது' என்ற எண்ணமே காசிநாத்துக்கு எழுந்தது. தன் எண்ணத்தின் தூண்டுதலில் தலையைத் திருப்பினான். அழகுத் தேவதை யென அவள் யமுனை நதிக் கரையில் நின்று கொண்டிருந்தாள்.

காசிநாத்தின் கண்கள் வியப்பில் விரிந்தன. தன் வேலைக்காக, இவ்வளவு நேரம் இந்தப் பெண் பதுமையாக நின்றிருக்கிறாள் என நினைத்த பொழுது உடல் சிலிர்த்தது. நன்றிப் பெருக்காக அவன் நயனங்களில் நீர் பெருகியது.

மற்றும் ஒரு முறை அவளைப் பார்த்தான். யாரும் இல்லாமல் தனியாகவே நின்றுகொண்டிருந்தாள் அவள். அவன் தன்னை நோக்குகிறான் என்பதை அறிந்ததும் தலையைத் தாழ்த்திக் கொண்டாள் அந்தப் பெண்.

கதிரவனை மேற்குத் திசையில் பார்த்த பொழுது, அவன் பகற் பொழுதில் பெரும் பாகத்தை எடுத்துக் கொண்டுவிட்டான் என்பது புரிந்தது. உளியைக் கீழே வைத்தான். அருகில் இருந்த மேல் போர்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டான். தலையைச் சிலிர்த்துக் கையால் கோதி விட்டுக் கொண்டான். அவள் நின்று கொண்டிருந்த இடம் நோக்கி நடந்தான்.

அவன் தன்னை நோக்கி வருவதைக் கண்டதும் அவள் சிரம் தாழ்த்தினாள். தன்னுடைய மேலாடையை நன்றாக இழுத்துப் போர்த்திக் கொண்டாள். என்ன பேசுவது என்று தெரியாமல் அவள் நயன இமைகள் துடித்ததும் ஓர் அழகாகத்தான் இருந்தது.

"தங்கள் உத்தரவைப் பெறாமல் தங்கள் வடிவத்தை வடித்துவிட்டேன். மன்னித்து விடுவீர்களா?" என்றான் அவளை நோக்கி.

இன்று—ராஜன் எடுத்த ரன்கள் 27. அடுத்து தங்கையுடன்
சைக்கிள் சவாரி. பின் முடித்தது வீட்டுப்பாடம்.
இனி—அடிக்கப்போவது மாங்காய்.

# "என்ன இருந்தாலும் 'ஹார்லிக்ஸ்' தரும் முழுமையான ஊட்டச்சிறப்பே தனி"

என்கிறாள் ராஜனின் தாய்.

முழு ஆடைப்பால், செழுமையான கோதுமை இவை தரும் நிறைவான பயனும் புரதச்சத்தும் நிரம்பியது 'ஹார்லிக்ஸ்'.

அன்றாட உணவில் விட்டுப்போகும் ஊட்டக்குறையை 'ஹார்லிக்ஸ்' ஈடுசெய்து உடலுக்கு உறுதியும் அதிக சக்தியும் அளிக்கிறது.

80 ஆண்டுகளுக்கும் மேலாக டாக்டர்கள் சிபாரிசு செய்து வரும் 'ஹார்லிக்ஸ்' தாய்மார்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது.

'ஹார்லிக்ஸ்' அருந்துங்கள். தரமான சத்தும் அதிக சக்தியும் அளிப்பது அதுவே.




## முழுமையான ஊட்டம்பெற-'ஹார்லிக்ஸ்'

'ஹார்லிக்ஸ்' பதிவு பெற்ற டிரேட் மார்க்.

HL 2916A

''மன்னிப்பா? எதற்கு? நான் மிகவும் பெருமைப்படுகிறேன்'' என்றாள் அவள் மெல்லிய குரலில் சிரத்தைத் தாழ்த்தியவாறு.

''பெருமைப்படத் தகுதி இருக்கிறதே உங்களுக்கு! இவ்வளவு அழகான உருவத்தை உடைய நீங்கள் தாராளமாகப் பெருமைப்படலாமே!'' புகழ் அஞ்சலியாக வார்த்தைகள் மலர்ந்தன காசிநாத்திடமிருந்து.

அவள், செடியில் உள்ள மலர் காற்றில் அசைந்தாடுவது போல் தலையை இல்லை என்று அசைத்தாள். ''என் உருவத்தை அவ்வளவு உயர்வாக நான் கருதவில்லை. என் உருவம் தங்கள் கையினால் செதுக்கப்படும் பாக்கியம் கிடைத்ததே என்று பெருமைப் படுகிறேன். எல்லாப் பெண்களுக்கும் கிட்டுமா, இந்தப் பாக்கியம்! நான்கூட ஒரு நாள் அழிந்து விடுவேன். ஆனால் நீங்கள் செதுக்கிய இந்தச் சிலை பல தலைமுறைகள் பார்த்து மகிழும் வண்ணம் அழிவற்ற சிரஞ்சீவியாக இருக்குமே!'' என்றாள் தேனினும் இனிய குரலில்.

அவள் பேச்சு அவனைச் சற்று அயரவே வைத்தது. அவளிடம் இணையற்ற அழகு இருந்ததால், வேறு எந்தத் தகுதியும் இருக்க வேண்டும் என்றுகூட அவன் நினைத்ததில்லை. ஆனால் அவள் பேச்சிலிருந்த ஆழ்ந்த கருத்து அவளிடம் ஒரு தனி மதிப்பை ஏற்படுத்தியது காசிநாத்துக்கு. அவள் கண்டிப்பாக ஒரு பண்டிதரின் மகளாகத்தான் இருக்கவேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்திருந்தான். அவளைப் பற்றி எப்படிக் கேட்பது எனப் புரியாமல் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

''உங்கள் தொழிலை நான் மிகவும் பாராட்டுகிறேன். படைப்பில் கடவுளையும் மிஞ்சி விடுகிறீர்களே! ஆண்டவன் தன்





படைப்புக்கு அழியும் காலத்தையும் நிர்ணயித்து விடுகிறான். சிற்பியோ சிரஞ்சீவியாக்கி விடுகிறானே தன் படைப்புகளை! 'வெய்யிலும், மழையும் இவைகளை அழிப்பதில்லை. காலம் தன் முதுமையின் முத்திரையைப் பதிப்பதில்லை! அடுத்து வரும் சந்ததிகளுக்கு உங்களைப் போன்றவர்கள்தான் வரலாற்றுப் பெருமைகளைக் கூற முடியும்! எத்தனை புனிதமான தொழில் உங்களுடையது!'' அவனை நோக்கித் தன் இரு கைகளையும் குவித்தாள் அவள்.

வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் அவன். அப்பப்பா! என்ன அழகு! ஒவ்வொரு பகுதியிலுமா அழகு இப்படித் தாண்டவமாடும்? குவித்த அவள் கரங்கள் மலரவிருக்கும் தாமரை மொட்டை நினைவுறுத்தின. அவள் விரலின் நுனிகளில் பரவியிருந்த செம்மை நிறம் தனிக் கவர்ச்சி தந்தது.

''இவ்வளவு உயர்வாகப் பேசுவதற்குத் தகுதியில்லாதவன் நான். உங்களைப் போன்றவர்கள் உதவியினால் அழகு உருவங்களைச் சமைப்பது பெரிய காரியமா?''

அவள் சிரித்துக் கொண்டாள்.

அவன் ரசித்தான்.

''நீங்கள் இந்தப் பக்கத்தில்தான் இருக்கிறீர்களா? தனியாகவா வந்தீர்கள்?'' என்று கேட்டான் வியப்போடு.

''என் தகப்பனார் கல்வி போதகர். ஓரளவு பணக்காரரும்கூட. நாங்கள் இந்த ஊரில் சற்றுத் தள்ளியிருக்கிறோம். இன்று என் தோழிகளுடன் வந்தேன். நீங்கள் என் உருவத்தைச் செதுக்க ஆரம்பித்ததைப் பார்த்ததும் அதற்குப் பங்கம் வரக் கூடாதே என்று நான் மட்டும் தங்கிவிட்டேன்'' என்றாள் அவள்.

அதிர்ந்தான் அவன். ''அப்படியானால் இப்பொழுது தனியாக எப்படிப் போவீர்கள்?''

அவள் மணியைக் கொட்டியது போல் கலகலவென்று நகைத்தாள். ''தனி என்ன? அங்குதான் எங்கள் பல்லக்கு இருக்கிறதே! தோழிகளைத்தான் நாழியாகிறதே என அனுப்பிவிட்டேன்.''

''உங்கள் வீட்டில் கோபித்துக் கொள்ள மாட்டார்களா?'' தயக்கத்தோடு கேட்டான் அவன்.

''கோபித்துக் கொள்ள என்ன இருக்கிறது? மக்கள் நடமாட்டம் துண்டிக்கப்பட்ட பகுதியா என்ன இது? என் தந்தையே இந்தப் பெரும் பணிக்கு நம்மால் இயன்ற உதவி செய்ய வேண்டும் என்று கூறுவதுண்டு. தம் மகள், இவ்வாறு ஒரு சிறு உதவி செய்தாள் எனத் தெரிந்தால், மிகவும் மகிழ்ச்சி அடைவார்'' என்றாள் உவகை பொங்க.

அவன் புல்லரித்துப் போனான். ''மிக்க நன்றி. என் பெயர் காசிநாத். இந்தக் கோயிலின், இந்தப் பகுதி மதில்சுவரை மிகப் பிரமாதமாகச் செதுக்கிவிட வேண்டும் என்பது என் குறிக்கோள். அழகைக் கற்பனையிலிருந்து செதுக்குவதைவிட நேரில் பார்த்துச் செதுக்குவது உயர்வாகவும், சிறப்பாகவும் இருக்கிறது!'' என்றான்.






# சலவை செய்யும் கட்டி டெடர்ஜென்ட் சக்தி செறிந்தது
















**டெட்** டெடர்ஜென்ட் சலவைக் கட்டி
## சோப்பைவிட 50% அதிக துணிகளை, அதிவெண்மை-யாக சலவை செய்கிறது

—மென்னீரிலும், சாதாரணமாக நுரைவிடாத நீரிலும்

அவன் அவளை ஒரு முறை கூர்ந்து பார்த்தான். "என் பெயர் ஷோபா" ரத்தினச் சுருக்கமாக முடிந்தது அவள் பேச்சு.

'ஷோபா! அழகு என்பதே பெயரா?' தன்னுள் கேட்டுக் கொண்டான் அவன்.

"நான் வரட்டுமா? நேரமாகிறது" என்று புறப்பட்டாள் அவள்.

தடுத்து நிறுத்தவும் முடியாமல், சம்மதமும் தர முடியாமல் தவித்தான் அவன்.

அவள் அன்னமாக நடந்து பல்லக்கில் ஏறினாள். அவன் உடன் சென்றான். பல்லக்கின் திரையைப் போடுமுன், அதன் பக்கவாட்டைப் பிடித்தவாறு நின்றுகொண்டிருந்தவன், "மீண்டும் எப்பொழுது வருவீர்கள்?" என்று வினவினான் ஆவலோடு.

."எதற்கு?" நயனங்களை உயர்த்திக் கேட்டாள் அவள்.

"குறிப்பாகச் சொல்ல எதுவும் இல்லை. எப்பொழுது மீண்டும் பார்க்கலாம் என்று கேட்டேன்."

"ஏன், யமுனா நதிக் கரையில்தான் அடிக்கடி பார்க்கிறீர்களே!"

"நான் பார்ப்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று வியப்போடு கேட்டான்.

"சிற்ப மன்னரே! மனிதன் உணர்ச்சிவசப்படும் பொழுது தன் செயல்கள் பிற மனிதர்களால் கவனிக்கப்படுகின்றன என்பதை மறந்து விடுகிறான். ஒரு நாள், யமுனா நதிக் கரையில், தள்ளியிருக்கும் ஒரு பாறையில் என் உருவம் காவிக் கட்டியினால் வரையப்பட்டிருப்பதைக் கண்டேன். வெறும் கோடுகளால் மனித உருவத்தை இவ்வளவு தத்ரூபமாக வரைய முடியும் என்பதை அன்றுதான் நான் தெரிந்து கொண்டேன். இதனை யார் வரைந்திருப்பார்கள் என்று சுற்றிப் பார்த்த பொழுது, அதன்பின் நீங்கள் மறைவாக இருப்பது தெரிந்தது. இத்தகைய கலை ஆர்வத்தைத் தடுக்கக் கூடாது என்று நான் அடிக்கடி அங்கு வரலானேன். தங்களைக் கவனிக்காதது போலவும் நடந்து கொண்டேன். என் தந்தைக்குக்கூட இது தெரியும்."

அவள் பேச்சற்று நின்றான்.

அவள் சிரம் அசைத்து விடைபெற்றுக் கொண்டாள். பல்லக்கின் திரையைப் போட்டுவிட்டு மனத்தின் எண்ணங்களுக்குத் திரை போட முடியாமல் தவித்தான் அவன்.

மறு நாள் பொழுது மலர்ந்தது. சிற்ப வேலையை ஆரம்பித்தான் காசிநாத். முதல் நாள் செதுக்கிய ஷோபாவின் உருவமே சிந்தையில் நின்றது.

தன் அருகில் காலடிச் சத்தம் கேட்டுத் திரும்பினான். எழிலரசியாக, கொத்து மலர்களோடு ஷோபா நின்று கொண்டிருந்தாள்.

"இன்றும் சிற்பங்களைப் பார்க்க வந்தீர்களோ?" என்று அவன் குறும்பாகவே கேட்டான்.

"பார்க்க வரவில்லை. என் உருவத்தைப் பதிக்கவே வந்தேன்" என்றாள்.

அறுபத்து நான்கு கலைகளும் கற்று நாட்டைத் திறம்பட ஆண்ட அரசிகளுக்கும்,



ஸ்வீடனில் தபால் இலாகாவின் உரிமை, காலந் தவறும் சேவையை மக்களுக்கு விளக்க ஒரு திரைப்படம் எடுத்தனர். திரையிடுவதற்காகத் தபால் மூலம் அனுப்பப்பட்ட அந்தச் செய்திப் படம் பிறகு மக்களுக்குக் காண்பிக்கப்படவே யில்லை. காரணம், அச்செய்திப் படம் தபாலில், நடுவழியில் எங்கோ தொலைந்து விட்டது! 'கிளாலன்'

'நியூ டைம்ஸ்'

போர்க்களத்தில் ஆணுக்கு இணையாகப் போர் புரிந்த வீராங்கனைகளுக்கும், கல்வி கற்று வாதத்தில் திறம்படப் பங்கு பெற்று வெற்றி வாகை சூடிய வனிதையர்களுக்கும் தம் பெண் சளைக்கக் கூடாது என்ற நோக்கில் பரந்த கல்வியைப் பெண்ணுக்குப் புகட்டியிருந்தார் ஷோபாவின் தந்தை. மிகுந்த கல்வி அறிவினால் மிக முற்போக்கான எண்ணங்களும் அவளிடம் காணப்பட்டன.

அன்று ஆரம்பித்த அந்தத் தொடர்பு தொடர்ந்தது. தினசரி அவள் அந்த இடத்துக்கு வருவதும், அவளை மாதிரியாக வைத்துக் காசிநாத் சிற்ப உருவங்களைச் சமைப்பதும் வழக்கமாகியது.

ஷோபாவின் ஒத்துழைப்பால், மக்கள் பிரமிக்கும் வகையில் மடமடவென்று உருவங்களை வடித்தான் காசிநாத். காலத்தாலும், அழிக்க முடியாத உயர் சிற்பங்கள் உருப் பெற்று உயர் காட்சியைத் தந்தன.

காசிநாத்தின் திறனுக்கு ஏற்ப அவனுக்கு ஷோபா கிடைத்தாளே என மற்றச் சிற்பிகள் கூறிக் கொண்டாலும், பொறாமைப்படாமல் அவன் வேலையில் சிறப்படைய உறுதுணையாயிருந்தனர்.

ஓய்வு நேரங்களில் எல்லோரும் அமர்வதும், எத்தகைய உருவத்தை வடிக்கலாம் என விவாதிப்பதும் அங்கு வழக்கமாயிருந்தது. ஷோபா எவ்விதம் தோற்றமளிக்கலாம் என்றும் தரமான அபிப்பிராயங்களை எடுத்துக் கூறுவர்.

அவை எல்லாம் பெரும் மனத்தோடும், முழு மனத்தோடும் ஏற்கப்பட்டாலும்கூட ஷோபாவின் உருவத்தைச் சிலையாக வடிக்கும் உரிமை காசிநாத்துக்கு மட்டுமே இருந்தது. ஆடலரசியாகவும், காதலியாகவும், தெய்வ மங்கையாகவும், தெய்வக் குழந்தையின் தாயாகவும் பல கோணங்களில் அவளை வடித்தான் காசிநாத்., அவன் உளி ஓயாமல் வேலை செய்தது. எழும்பிய சுவர்களெல்லாம் சிற்ப வடிவங்களாகத் திகழ்ந்தன.

ஒரு சமயம் சற்று ஓய்வுக்காக அமர்ந்திருந்தான் அவன். அவன் செதுக்கிய சிலைகளை விமர்சித்தவாறு, அவைகளுக்குப் பூட்டிய

நகைகள் போதவில்லை எனக் கூறி எடுத்துக் காண்பித்துக் கொண்டிருந்தாள் ஷோபா. ''மணமான பெண்ணுக்குக் கால் விரலில் மெட்டி போடாமல் இருக்கலாமா? என்ன சிற்பம் வடிக்கிறீர்கள் நீங்கள்?'' என அவனைப் பரிகாசம் செய்து கொண்டிருந்தாள் ஷோபா.

அவள் கூறுவது தன் குறையை என்றாலும், அவள் கூறும் அழகை ரசித்துக் கொண்டிருந்தான் அவன். அவள் பொது அறிவும், புத்தி கூர்மையும் அவனை மகிழ வைத்தன. தனக்குள் சிரித்துக் கொண்டான் அவன்.

தலையைத் திருப்பி அவளை நோக்கி, ''ஷோபா, நீ எப்பொழுது மெட்டி போட்டுக் கொள்ளப் போகிறாய்?'' என்று ஆவல் பொங்கக் கேட்டான். அவளுடைய அழகு பாதங்களின் நீண்ட தளிர் விரல்களில் மெட்டி போட்டால், அழகு இன்னும் மேம்படும் என்பதில் சந்தேகம் வேறு? இந்த ஒரு பதிலில் அவள் உள்ளத்தைத் துல்லியமாகப் புரிந்து கொண்டுவிடலாமே என்ற துடிப்பும் அவனுக்கு இருக்கத்தான் செய்தது.

அவள் பதுமையாக அமர்ந்திருந்தாள்.

''ஷோபா !' நான் கேட்டேனே! பதில் சொல்லவில்லையே !'' என்றான் அவன்.



லண்டனில் உள்ள டாக்டர் தெரன்ஸ் கோ என்பவரைப் பார்க்க வரும் நோயாளிகள் விருப்பப்பட்டால் காத்துக் கொண்டிருக்கும் நேரத்தில் முடி திருத்திக் கொள்ளலாம். காத்திருக்கும் அறையிலேயே டாக்டரின் மனைவி ஒரு சலூன் நடத்தி வருகிறார்!

ஆதாரம்: டிட் பிட்ஸ் - தகவல்: கன்னிகா

'' நான் எடுத்துக் கொள்ளும் சிரமமும், தங்கள் சிற்ப வேலைக்காகக் கொடுக்கும் ஒத்துழைப்பும் இந்த ராதாஸ்வாமி கோயிலின் எழில் தோற்றத்துக்கும், அளவில்லாத புகழுக்கும் மட்டும்தான் என்று நினைக்கிறீர்களா?'' மென்மையான குரலில் ஆழ்ந்த பொருளுடன் கேட்டாள் அவள்.

இதனைக் கேட்டதும் உள்ளத்தில் இன்பம் சிறகு விரித்துப் பறந்தது. ஆனாலும், அவளைச் சற்றுச் சீண்டிவிட்டு வேடிக்கை பார்க்க விரும்பினான் அவன். என்னதான் புகழ் ஓங்கிய சிற்பியாக இருந்தாலும், இளம் ஆண் மனத்துக்கு உரிய விஷமத்தனம் இல்லாமலா போய்விடும்?

''புகழுக்காக மட்டும் என்று கூறிவிட முடியுமா ஷோபா? அமரத்துவம் பெற்று நிற்கும் கலைக்காகச் செய்யும் அரிய தொண்டு உன்னுடையது. இங்கு பதித்த உன்னுடைய மோகன உருவங்கள் எத்தனையோ ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள் வாழத்தான் போகின்றன. அது என்ன சாதாரணப் பெருமையா? எந்தப் பெண்தான் இதற்கு ஆசைப்படமாட்டாள்?'' என்றான் அவன் சாதாரணக் குரலில்.

சிறுவரைப் போல் அவனை நோக்கினாள் அவள். ''கல்லுடனேயே காலத்தைக் கழிக்கிறவருக்கு இதயத்தின் மென்மையான உணர்வுகளும் ஆசைகளும் எங்கு புரியப் போகின்றன? உங்கள் அருமைச் சிற்பங்கள் அழியாப் புகழ் பெற மட்டுமே என் காலத்தை எல்லாம் இங்கே வீணாக்கிக் கொண்டிருக்க நான் ஒரு மண்டூகம் இல்லை! எத்தனை சுயநலம் உங்கள் பேச்சிலே! 'ஆண்' என்ற உருவத்துக்காக மண்ணைப் பிசையும்போதே, பிரமதேவன் 'சுயநலம்' என்ற திரவத்தை அதில் நிரம்ப விட்டுத்தான் பிசைந்து விடுவார் போல் இருக்கிறது....'' என்றாள் காரமாக. கோபத்தில் அவளுடைய அழகிய நயனங்களின் இமைகள் படபடத்தன.

அவள் கோபமும் அவனை ரசிக்கத்தான் வைத்தது. வெகுண்டு அவள் கொட்டிய வார்த்தைகளைக் கேட்டதும், 'அடடா! இந்த மலர் இதயத்தைத் துடிக்க வைத்து விட்டோமே' என்ற வருத்தமும் ஏற்பட்டது. அவன் சிரித்தான். ''கோபிக்காதே, ஷோபா! உன் உள்ளத்தைத் தெரிந்துகொள்ள வேறு வழி இல்லையே! அதனால் சற்றுச் சீண்டினேன்!'' என்றான் மன்னிப்புக் கேட்கும் குரலில்.

அவள் நாணப் பூரிப்போடு தலையைக் குனிந்து கொண்டாள். இந்தப் பேச்சால் வெற்றி இருவருக்கும்தானே !

ராதாஸ்வாமி கோயிலின் முக்கியமான பகுதியான அந்த இடத்தின் கலைப்பணியை முடித்த பிறகே திருமணத்தை வைத்துக் கொள்வது என்ற ஏற்பாடு அவர்களுக்குள் இருந்தது. அந்தப் பகுதியைச் செவ்வனே முடித்து வெற்றி விழாக் கொண்டாடும் பொழுது திருமணம் வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் தீர்மானித்தனர்.

அவனும் வேக வேகமாகத் தன் திறமைகளையெல்லாம் கொட்டி அந்தப் பகுதி வேலையைச் செய்தான். அவளும் அவன் சோர்ந்து விடாதவண்ணம் உற்சாகப்படுத்தி வந்தாள்.

ஒரு நாள் பக்கத்து ஊரிலிருந்து நாராயண் பிரபு என்று ஒரு பெரும் பணக்காரர் ராதாஸ்வாமி கோயிலின் வேலைத் திறனைப் பார்க்க வந்தார். பிரமாதமான வரவேற்பு அவருக்குக் கொடுக்கப்பட்டது. நாராயண் பிரபுவும் ஒய்யாரமாகத் தம் பரிவாரங்கள் புடைசூழச் சிற்ப வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தார். சிற்பக் கலையை நன்கு ரசிக்கத் தெரிந்தவராதலால், ஒவ்வொரு சிற்பத்தின் முன்பும் நின்று உன்னிப் பார்த்து ரசித்தார்.

ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டு வந்தவர் காசிநாத் வடித்த சிற்பங்களைப் பார்த்ததும் அயர்ந்துவிட்டார். பேசுவது போல் இருக்கின்றனவே இந்தச் சிலைகள் ! அவற்றின் ஒப்பற்ற எழில் அவரைக் கவர்ந்துவிட்டது.

''காசிநாத்! நீ சாதாரணச் சிற்பியல்ல. பிரம்மனே உன் கரங்களில் வாசம் செய்கிறான். அதனால்தான், உன்னால், இவ்வளவு தத்ரூபமாக வடிக்க முடிகிறது.''

# நல்ல தேநீர் ரசிக்கப்படும் எல்லா இடங்களிலும் — குடும்பங்கள் விரும்பி வாங்குவது லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்

குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் விரும்பி அருந்தும் டீ இதுவே. விருந்தினர்களும் அவ்வாறே. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் திருப்தியளிக்கும் மணமுள்ள சத்து நிறைந்த, ருசிமிக்க கெட்டியான பானம். ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் உங்கள் குடும்பத்தார் அருந்தி மகிழ்வது. விருந்தினர்கள் விரும்பி அருந்துவது.

HIMALAYAN

LIPTON'S

FINEST

GOLDEN DUST TEA

பாக்கிங் செய்த தேயிலை மட்டுமே புதிதாகவும், மணத்துடனும் திகழ்கிறது.

**லிப்டன் என்றாலே நல்ல டீ**




LHCC-10 TAM

அவர் புகழுரையைத் தலையைக் குனிந்து மிகவும் மரியாதையாக ஏற்றுக் கொண்டான் காசிநாத். "இவ்வளவுக்கும் என் உழைப்பு மட்டும் காரணமில்லை. இவற்றைத் திறம்பட வடிக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுக்காக, தன் நேரத்தை யெல்லாம் 'மாதிரி'யாக நிற்பதிலேயே செலவழித்த இந்தப் பெண்ணுக்கும் பெருமையில் பெரும் பங்கு உண்டு" என்றான்.

நாராயண் பிரபு தலையைத் திருப்பி அங்கு நின்று கொண்டிருந்த பெண்ணைப் பார்த்தார். "ஓ! இவ்வூர் பெரும் பண்டிதர் மகள் ஷோபா அல்லவா இவள்?"

ஷோபா இரண்டு அடி முன் வந்து வணங்கி, "ஆம்!" என்றாள்.

"பண்டிதர் பெரும் பாக்கியசாலி. எத்தனை அழகான மகள் அவருக்கு! எந்தச் சின்ன விஷயமும் பரிமளிக்கக் கடவுளின் ஒத்துழைப்பு வேண்டும் அம்மா. அதைத்தான் அதிர்ஷ்டம் என்று பெயரிட்டுத் தெய்வத்தின் வாரிசாகக் கருதுகிறோம். உன் உயர் தோற்றம் என்றென்றும் நிலைத்து நிற்க, இப்படி ஓர் அற்புதமான ஆலயமும் ஒப்பற்ற சிற்பியும் கிடைத்திருக்கின்றனர் பார்!" என்றார்.

அவள் முறுவலித்து நின்றாள்.

"ராதாஸ்வாமி கோயிலின் திருப்பணிக்கு உன்னால் இவ்வளவு பெரும் தொண்டு செய்ய முடிவதற்கு நீ பெருமைப்பட வேண்டும். தெய்வம் கொடுத்ததைத்தானே நம்மால் தெய்வத்துக்குத் திருப்பித் தர முடியும். தெய்வம் தராத ஒன்றைப் புதுமையாய்ச் சிருஷ்டித்துத் தரத்தான் முடியுமா? உனக்கு ஆண்டவன் கொடுத்த லாவண்யத்தை அவன் கோயிலில் பிரதியாக்க நீ கொடுத்து வைத்திருக்க வேண்டும்" என்றார் உணர்ச்சி பொங்க.

"இந்தப் பெருமையை உணர்ந்து உன் தந்தை இந்தப் பணிக்கு உன்னை அனுப்பி வைத்தாரே, அதற்காக அவரையும் பாராட்டுகிறேன்!" என்றார் தொடர்ந்து.

பிறகு தாம் அணிந்திருந்த விலை உயர்ந்த முத்துமாலையை எடுத்து, "உன் பெரிய பணிக்கு என் சிறிய பரிசாக இதை ஏற்றுக் கொள், அம்மா!" என்று கூறி அவளிடம் கொடுத்தார்.

அவள் தயங்கியவாறே அதனைப் பெற்றுக் கொண்டாள்.

"காசிநாத், நீ வடிக்கும் இவளுடைய சிலையில் மறக்காமல் இந்த முத்துமாலையையும் வடித்துவிடு. ராதாஸ்வாமி கோயிலின் சிலையில் என் முத்து மாலையின் பிரதியாவது இருக்கும் பாக்கியம் எனக்கு இருக்கட்டும்" என்றார் நாராயண் பிரபு.

அவர் சொன்னதை அப்படியே செய்வதாக வணங்கிச் சொன்னான் அவன்.

நாராயண் பிரபு மகிழ்ச்சி மிகுந்தவராகத் தம்மிடமிருந்த பச்சைக் கல் பதிக்கப்பட்ட மற்றொரு மாலையைக் காசிநாத்தின் கழுத்தில் போட்டுவிட்டுத் தம் ஊருக்குப் புறப்பட்டார்.

அந்த நிமிடம் முதலே தன் சிற்பங்களில் தவறாமல் முத்துமாலையையும் வடிக்க ஆரம்பித்தான் காசிநாத். அதுவே அவன் கைவண்ணத்தின் முத்திரை என்றுகூடச் சொல்லலாம்.

நாராயண் பிரபுவின் வார்த்தைகளில் பெருமை கொண்டாள் ஷோபா. அது ஒரு தனி உற்சாகத்தை அவளுக்குத் தந்தது என்றும் சொல்லலாம். அவளுடைய உற்சாகம் காசிநாத்தின் உற்சாகத்தைப் பெருக்கியது.

நினைத்ததற்கு மேல் அழகும், பொருளும் நிரம்பிய சிற்பங்கள் உருவாயின. அவன் சற்று ஓய்ந்த நேரத்தில் சின்னச் சின்ன சிலைகளை ஷோபா செதுக்கலானாள்.

நாராயண் பிரபுவுடன் கூட வந்த அவர் தம்பி கேசவ் பிரபுவுக்கு ஷோபாவைப் பார்த்ததும் எப்படியாவது அவளை மணந்து கொண்டு விட வேண்டும் என்ற ஓர் ஆவல் எழுந்தது. இதை மெல்லத் தன் தமையனிடம் தெரிவித்தான் கேசவ் பிரபு.

இதைக் கேட்டதும் முதலில் நாராயண் பிரபுவுக்கு அதிர்ச்சியாயிருந்தது. தம் சம்பந்தம் மற்றொரு ஜமீந்தாருடன் நடப்பதுதானே பொருத்தமாக இருக்கும் என்று நினைத்தார். அதே சமயத்தில் தம்பியின் மேல் இருந்த பாசத்தையும் நினைக்க வேண்டியிருந்தது.

வெகு நேரம் யோசித்த பிறகு நகைகளுடனும், கனிகளுடனும், மணம் கமழும் மலர்களுடனும், பட்டாடைகளுடனும் வாசனைத் திரவியங்களையும் எடுத்துக் கொண்டு, அவள் தந்தையிடம் சென்று தம் அபிப்பிராயத்தைக் கூறினால், அவர் கண்டிப்பாக மறுக்க மாட்டார்; தம் பெண்ணுக்குக் கிட்டக் கூடிய அந்தஸ்தை நினைத்துப் பூரிப்பார் என்றும் அவர் உள்ளம் கூறியது.

அந்த வண்டியின் அழகும், அதில் பூட்டியிருந்த குதிரைகளின் கம்பீரமும், மக்களைக் கண்கொட்டாமல் பார்க்கச் செய்தன.

வண்டி துரிதமாக வந்து ஷோபா வீட்டு வாசலில் நின்ற பொழுது எல்லாருமே சற்று விசித்திரமாகப் பார்த்தனர்.

வாசல் திண்ணையில் அமர்ந்து, ஏதோ தீவிரமாகப் பார்த்துக் கொண்டிருந்த ஷோபாவின் தந்தையான பண்டிதர், நாராயண் பிரபுவின் வண்டி, தம் வீட்டு வாயிலில் நின்றதும் திடுக்கிட்டார்.



குழந்தை: கடவுளே! வைடமின்னு சொல்றாளே அதைக் குஞ்சாலாடுவிலும் ஓமப்பொடியிலும் நீங்க போடப்படாதா? காட் லிவராயிலிலும் ஷார்க் லிவராயிலிலுமா போடணும்?

"ஏன்டா, உங்கப்பாவைத் தேள் கொட்டிவிட்டதாமே?"

"ஆமாம்! உங்களைப் பார்க்கப் பயந்துண்டு கதவு மூலையிலே போய் ஒளிஞ்சிண்டார். அப்போ கொட்டிவிட்டது."



வண்டியிலிருந்து இறங்கிய நாராயண் பிரபு எந்தவித உபசரிப்பையும் எதிர்பார்க்காதவராக வேகமாக அவர் வீட்டினுள் நுழைந்தார்.

இதற்குள் அங்கிருந்த ஆசனத்தைச் சீராக்கி, "வரவேண்டும், வரவேண்டும். தங்கள் வரவால் இந்தக் குடிசை புனிதமடைந்தது" என்றார் பண்டிதர் உணர்ச்சி பொங்க.

நாராயண் பிரபு முறுவலித்தார். ஒரு முறை சுற்றி நோட்டம் விட்டு, "ஷோபா எங்கே?" என்று கேட்டார்.

'பெரிய மனிதர்களுடைய பார்வை அதிகம் மேலே விழக் கூடாதே! நல்லதல்லவே?' என நினைத்த பண்டிதர், "ஷோபா, வழக்கம் போல் ராதாஸ்வாமி கோவிலுக்குப் போயிருக்கிறாள்!" என்றார் மெல்லிய குரலில்.

"அவளுக்குக் கிட்டிய பெரும் பாக்கியம் அது!" என்றார் பிரபு.

இதற்குள் ஓடிச் சென்று, கனிகளைச் சீராக நறுக்கி, ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் வைத்து அத்துடன் வெள்ளிக் கிண்ணத்தில் பாலையும் நிரப்பி எடுத்துக் கொண்டு வந்தார் பண்டிதர்.

"நல்ல சமாசாரம் ஒன்று கொண்டு வந்திருக்கிறேன். அதனைச் சொல்லிய பிறகு தான் இவையெல்லாம் பற்றி என் சிந்தனை திரும்பும்" என்றார் நாராயண் பிரபு.

"நீங்கள் வந்ததே நல்ல சமாசாரம்தானே! ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் நானே வந்திருப்பேனே! இவ்வளவு சிரமம் நீங்கள் எடுத்துக் கொண்டிருக்க வேண்டாம்!" என்றார் பண்டிதர்.

"உங்கள் மகள் ஷோபாவுக்கு எப்பொழுது திருமணம் முடிக்கப் போகிறீர்கள்?"

பண்டிதர் இலேசாகச் சிரித்தார். "காலம் வரவேண்டுமே! மனத்துக்கு உகந்த வரன் கிடைக்க வேண்டுமே!" என்றார் தயங்கிய குரலில்.

"காலம் வந்துவிட்டது. அந்த நற்செய்தியுடன்தான் நான் வந்திருக்கிறேன்" என்றார் பிரபு.

"ராம்ஜீ! பரிசுகளைக் கொண்டுவரச் சொல்லுங்கள்!" நாராயண் பிரபுவிடமிருந்து செயலாளருக்குக் கட்டளை பிறந்தது.

அதனைத் தொடர்ந்து, ஜரிகை வேலைப்பாடு செய்த பீதாம்பரத்தால் மூடப்பட்ட பெரிய தாம்பாளத்தைப் பணியாள் கொண்டு வந்து வைத்தான்.

பண்டிதர் பிரமிப்புடன் அதைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"என் சகோதரன் கேசவ் பிரபுவுக்குத் தங்கள் மகளை மணம் முடித்துக் கொள்ளலாம் என்ற ஆவலோடு வந்திருக்கிறேன்" என்று கூறினார் நாராயண்பிரபு.

"....கேசவ் பிரபுவுக்கு....என் மகளா?" வியப்பு விரிந்தது பண்டிதரிடம். உணர்ச்சி மேலீட்டால் அவர் கண்கள் படபடத்தன.

"இத்தனை ஆச்சரியம் எதற்கு? பணத்தையும், அந்தஸ்தையும் பார்த்து நீங்கள் பயந்து விட வேண்டாம். உங்கள் பெண்ணைப் போன்ற அழகியையும், புத்திசாலியையும், எத்தனை பணம் கொடுத்தாலும் வாங்க முடியாது. மேலும், உங்களுக்குத் தெரியாதா, பெண்ணை எடுக்கும்போது நமக்கு மேம்பட்ட அந்தஸ்திலிருந்து எடுக்கக் கூடாது என்று?" என்றார் சற்று அழுத்தமாகவே.

"மன்னிக்க வேண்டும். அவ்வளவுக்கு நான் கொடுத்து வைக்கவில்லையே!" என்றார் பண்டிதர்.

'என்ன சொல்கிறீர்கள்?' என்பதைப் போல் அவரைக் கூர்ந்து பார்த்தார் நாராயண்பிரபு.

"என் மகளுக்கு ஏற்கனவே திருமணம் தீர்மானமாகிவிட்டது. நீங்கள் அளிக்கும் பொன்னான வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள முடியாதவனாக இருக்கிறேன்!" என்றார் அவர் தயங்கிய குரலில்.

"என்னது! ஷோபாவுக்கு நிச்சயம் செய்து விட்டீரா? மற்றவர்களுக்கு எப்படித் தெரியாமல் போயிற்று?" என்றார் நாராயண் பிரபு பதறியவராக.

"நிச்சயதார்த்த விருந்து இன்னும் வைக்கவில்லை. அதனால்தான்....."

"அப்படியானால்....."

"ஷோபாவும், சிற்பி காசிநாத்தும் ஒருவரையொருவர் நேசிக்கின்றனர். ராதாஸ்வாமி கோயிலில் தன் பகுதி வேலையை முடித்த பிறகே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று விரதம் பூண்டிருக்கிறான் காசிநாத். ஷோபாவும் அதற்கு ஒப்புதல் தந்திருக்கிறாள். மனப்பூர்வமாக விரும்பும் இருவரை, அநாவசியமாகப் பிரிக்க வேண்டாம் என்ற எண்ணம்தான் எனக்கு. உங்கள் சம்பந்தத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இது சாமான்யம் என்றாலும், இதுவரையில் வளர்த்த ஆசையைத் துண்டிக்க எனக்குத் தைரியம் இல்லையே!" என்றார் பண்டிதர் மெல்லிய குரலில்.

"தாம்பூலம்தான் மாற்றவில்லையே!....' ஷோபாவிடம் அபிப்பிராயம் கேட்டால் என்ன? என்ன இருந்தாலும், ஒரு மகாராணியைப் போல் வாழ்வதென்றால் எந்தப் பெண்ணுக்கும் விருப்பம் இருக்கத்தானே செய்யும்? காசிநாத்தைத் திருமணம் செய்து கொண்டால் இந்த உயர்வையெல்லாம் சிந்திக்கத்தான் முடியுமா?" என்றார் அவர் விடாப்பிடியாக.

"மன்னிக்க வேண்டும், பிரபு. பெண்களைப் பொறுத்த வரையில் வாழ்க்கை நிறைவடைவது பணத்தாலும், பதவியாலும் இல்லை. அவர்கள் மனம் ஒருவரையொருவர் விரும்பி விட்டால், மற்றவர்களிடம் இருக்கும் எந்த உயர்வும் அவர்கள் கண்ணில் படுவதில்லை. ஷோபாவும் காசிநாத்தும் வாயைத் திறந்து சொல்லா விட்டாலும், அவர்களுடைய குறிப்பிலிருந்து நான் தெரிந்து கொண்டேன். அதனால்தான் அவன் உருவத்தை அவன் வடிப்பதையும் நான் தடுத்து நிறுத்தவில்லை!" என்றார் பண்டிதர்.

நாராயண் பிரபு சிரித்தார். "நீங்கள் அவர்கள் மன நிலையைப் புரிந்து கொள்ளவில்லை என்பது இதிலேயே நன்றாகத் தெரிகிறது. தன் மனைவியாகப் போகிறவளின் உருவத்தை, எவனும் பலர் பார்த்து ரசிக்கும்படி சிற்பமாக வடிக்கமாட்டான். அவனுடைய

மாதம் ஒன்று, இரண்டு, மூன்று மெல்ல கவிழ்ந்து படுக்கும் கன்று
மாதம் நான்கு, ஐந்து, ஆறு மெதுவாக் தவழ்ந்து நடைக்கும் பாரு
மாதம் ஏழு, எட்டு, ஒன்பது நன்கு உட்காரும் குழந்தை என்பது

# மாதம் பத்து, பதினொன்று, பனிரெண்டு நின்று சிரிக்கும் அன்புடன் கண்டு.

மூன்றாவது மாதத்திலிருந்து, உங்கள் குழந்தைக்குப் பால் மட்டும் போதாது. சீரான உடல் வளர்ச்சிக்கு உங்கள் குழந்தைக்குத் தேவை பாரெக்ஸ்–அதன் முதலாவது திடஉணவு.
குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கு ஏற்ற சரியான புரதச் சத்து கொண்டது பாரெக்ஸ்.




தாய்ப்பால் குடிப்பதை குழந்தை எவ்வளவு சீக்கிரம் விட்டுவிடுகிறதோ அவ்வளவு நல்லது என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். குழந்தையின் சீரான வளர்ச்சிக்கு வேண்டிய சரியான புரதச் சத்துடன், கார்போஹைட்ரேட்டுகள், கால்சியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் மற்றும் தாது உப்புகள் யாவும் அடங்கியது பாரெக்ஸ்.

பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலையை இணைத்து, டிபார்ட்மெண்ட் K-1, த.பெ. 16558, பம்பாய் 18 டபிள்யூ. (WB) என்னும் முகவரிக்கு எழுதுக. (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்.)

சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு.

**பாரெக்ஸ்® – க்ளாக்ஸோ தயாரிப்பு!**

CMGF-33-202 TAM

தனி உரிமைக் குணம் அதற்கு இடம் தராது. இச்செயல் ஒன்றே சாசிநாத், ஷோபாவை மணக்கும் அபிப்பிராயத்தில் இல்லை என்பதை நன்கு தெரிவிக்கிறது'' என்றார்.

''அந்த முடிவு தவறு. பிற பெண்களைத் தூய எண்ணத்தோடு பார்க்கும் குணம் கொண்ட எவனுக்கும் நீங்கள் சொல்லும் எண்ணம் இராது. நெஞ்சில் வஞ்சம் கொண்டவனே பிறர் தன் மனைவியைப் பார்க்கக் கூடாது என்று நினைப்பான்'' என்றார் பண்டிதரும் விடாமல்.

''எதற்கு இத்தனை விவாதம்? ஷோபாவின் அபிப்பிராயத்தையே கேட்டுவிடுவோமே!'' என்றார் நாராயண் பிரபு உறுதியாக.

''கேட்பதில் எனக்கு ஆட்சேபம் இல்லை. ஆனால் அவர்கள் மனத்தில் மறைந்திருக்கும் எண்ணம் எனக்கு நன்றாகத் தெரியும்!'' என்றார் பண்டிதர்.

சிறிது நேர யோசனைக்குப் பிறகு, ''நீங்கள் சொல்லுவதுதான் சரி. இவ்வாறு ஒரு பெண்ணைக் கட்டாயப்படுத்தி மணக்கச் செய்வதை நான் விரும்பவில்லை. மனம் ஓர் இடத்தை நாடிவிட்டது என அறிந்தால், அது தகுதியானதாயின், அதனை நாம் ஆதரிப்பதே சிறந்தது. மற்றவை என்னதான் உயர்வானாலும் வரவேற்கத் தகுந்தது அல்ல'' என்றார் நாராயண் பிரபு, அழுத்தமாக. பிறகு அவர், ''ஷோபா தன் மன விருப்பம் போல் மணந்து, நீண்ட நாட்கள் நன்றாக இருக்க வேண்டும் என நான் வாழ்த்துகிறேன்'' என்று கூறினார்.

பிறகு சட்டென்று எழுந்து, ''சரி, புறப்படுகிறேம்'' என்றார் நாராயண் பிரபு.

''என்னது? இவ்வளவு அவசரம்? சற்று அமரக் கூடாதா?'' என்றார் பண்டிதர்.

''சற்று அமர்வதுபோல் இல்லையே, வந்த விஷயம்!'' என்று வேதனையுடன் கூறியவர் அந்த வினாடியே அங்கிருந்து புறப்பட்டும் விட்டார்.

உடன் இருந்த பணியாட்கள், கொண்டு வந்த பொருட்களை அப்படியே திருப்பி எடுத்துச் சென்றனர்.

கேசவ்பிரபு இந்த முடிவைக் கேட்டு வெகுண்டான். அவளை முதன் முதலில் கோயிலில் பார்த்த போதே அவனுடைய அழகுத் தோற்றம் அவனை கிறங்கச் செய்தது. நாராயண் பிரபுவே இந்தப் பேச்சை ஆரம்பித்த பொழுது அவன் மகிழ்ந்தான். தேவதையைப் போன்ற அப்படியொரு பெண்ணை மணப்பதைப் பெரும் அதிர்ஷ்டமாகவே கருதினான் அவன்.

மனத்திலேயே அவளை ராணியாக்கி அந்தக் கற்பனையிலேயே மிதந்து கொண்டிருந்த கேசவ் பிரபுவுக்கு அவள் தனக்குக் கிட்டமாட்டாள் என்ற செய்தி பெரும் அதிர்ச்சியாகவே இருந்தது. எப்படியாவது அவளை அடைந்தே தீர வேண்டும் என்ற வெறி அவனிடம் குடிகொண்டது.

ஒரு நாள் கேசவப் பிரபு தன்னை மிகவும் வசீகரமாக அலங்கரித்துக் கொண்டு தற்பெருமையைப் பறைசாற்றும் வகையில், ஆட்கள் புடைசூழக் கோயில் வேலையைப் பார்க்க வந்தான்.

கலையை ரசித்துக் கொண்டே வந்தவன் காசிநாத் வேலை செய்யும் இடத்துக்கு வந்ததும் அங்கு நின்று விட்டான். அவனுடன் நட்பு முறையில்பேச ஆரம்பித்தான்.

தொடர்ந்து அடிக்கடி வர ஆரம்பித்த கேசவ் பிரபு காசிநாத்திடம் நேரத்தைச் செலவழித்தான். பல நாட்கள் இப்படிச் சென்றன.




பசுவுக்கு இரண்டு கொம்புகள் இருப்பதுபோன்று இரண்டு கூர்மையான கொம்பு போன்ற பகுதிகள் இம்மீனின் தலைப் பகுதியில் துருத்திக் கொண்டு காட்சியளிப்பதால் இதற்குப் ''பசுமீன்'' என்ற சிறப்புப் பெயர். சுமார் ஓர் அங்குலம் முதல் ஒன்பது அங்குலம் நீளம் வரை வளரக் கூடியது. மனிதனுக்கு உணவாகப் பயன்படாத இம்மீன்கள் உலகில் உள்ள உஷ்ணப் பிரதேச கடற்கரைப் பகுதிகளிலெல்லாம் காணப்படுகின்றன. குறிப்பாக தூத்துக்குடி கடற்கரை இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள தொண்டி கடற்கரை மூக்கரை ஆகிய இடங்களில் இம்மீன்கள் அகப்படுவதுண்டு.

இதன் உடற்பகுதிகள் யாவும் அறுகோண வடிவமுள்ள கடினமான எலும்புத் தகடுகளால் போர்த்தப் பாதுகாக்கப்பட்டுள்ளன. கண்களும், வாயும், துடுப்புகளும், வால் பகுதியும் மாத்திரம்தான் இக்கடினமான எலும்புத் தகடுகளால் போர்த்தப்படாமல் காட்சியளிக்கின்றன.

பசுமீன் நீந்தும் போது நீரை வாயினுள் உறுஞ்சி சுவாசிப்பதற்கு உண்டான சிறிய துவாரத்தின் வழியாகப் பின்னோக்கி வெகுவேகமாக வெளியிடுகிறது. இதனால் உண்டாகும் உந்து சக்தியின் உதவியால் நீரில் விரைகிறது. முதுகுப்புறத் துடுப்பும், குதத் துடுப்பும் நீந்த உதவுகின்றன. ஆபத்து சமயத்தில் விசிறி போன்ற அமைப்புடைய வால் துடுப்பையும் பயன்படுத்தி வேகத்தை அதிகரிக்கும்.

தற்காப்புக்கென்று எவ்வித விஷ உறுப்பையும் கொண்டிராத இம்மீனுக்கு இதன் உடலைச் சுற்றியுள்ள எலும்புத் தகடுகள்தாம் பாதுகாப்பளிக்கின்றன. இதன் பகை விலங்குகள் கூர்மையான கொம்பு போன்ற அமைப்புடைய உறுப்பைப் பார்த்தவுடன் அச்சம் கொண்டு பயந்து ஓடோடிவிடும். துணிந்து சில கடல் பிராணிகள் இம்மீன்களைக் கடித்தாலும் அதனால் பசுமீன் காயமடைவதில்லை. இதன் உடல் எலும்புத் தகடுகளாக இருப்பதால் உண்ணக்கூடிய சதைப் பற்றுள்ள உடல் இல்லை என எண்ணிக் கடிப்பதை விடுவித்துவிட்டுச் சென்று விடும். இம்மீனின் உடல் பகுதி பெட்டி போன்ற அமைப்பில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருப்பதால் இம்மீனுக்குப் ''பெட்டி மீன்'' என்ற சிறப்புப் பெயர் கூட உண்டு.

இறந்த பசுமீன்களை வெய்யிலில் நன்றாகக் காய வைத்து வர்ணம் பூசிக் காட்சிப் பொருளாக வைத்திருப்பதைக் கடற்கரைப் பகுதிகளில் அநேக வீடுகளில் காணலாம்.

- அந்தோணி பேபிஸ்

ஒரு நாள் கேசவ் பிரபு காசிநாத்தைத் தன்னுடன் தன் ஊருக்கு அழைத்துச் சென்றான். திரும்பி வந்த காசிநாத் மயங்கிச் சுருண்டு விழுந்து மாண்டும் போனான்.

துடித்துப் போனாள் ஷோபா.

விஷயம் அறிந்ததும் பதறி ஓடி வந்தான் கேசவ் பிரபு. அவனைக் கண்களில் நெருப்புப் பறக்க நோக்கினாள் ஷோபா. காசிநாத்தைக் கேசவ் பிரபுதான் கொன்று விட்டான் என்று ஷோபா உறுதியாக நம்பினாள்.

காசிநாத்தின் மரணத்துக்குத் தான் காரணமில்லை என்று கேசவ் பிரபு எவ்வளவோ கூறினான். மன்றாடினான். ஷோபா அதை நம்பத் தயாராக இல்லை.

சூழ்நிலை காசிநாத்தைக் கொன்றவன் — கேசவ் பிரபுதான் எனக் கருதும்படி இருந்தாலும் உண்மையில் அந்தக் கொலையைச் செய்தவன் கேசவ் பிரபு இல்லை.

அவன் உண்மையைச் சொல்லிப் புலம்பியதையோ, நண்பனின் மறைவால் துடித்ததையோ, நடிப்பு என்றே கருதினாள் ஷோபா. அவளுக்கு வந்த ஆத்திரத்தில், அருகில் இருந்த உளியை எடுத்து அவனை நோக்கி வீசி எறிந்தாள்.

ஆழமாகக் கேசவ் பிரபுவின் உடலில் பாய்ந்த உளி ரத்தத்தைப் பொங்க வைத்தது. கண நேரத்தில் நடந்துவிட்ட இந்தச் செயலால் சுற்றியிருந்த எல்லோருமே பதறிப் போய் விட்டனர்.

பொங்கிய ரத்தத்தைக் கண்டு ஷோபாவும் பிரமித்து நின்றுவிட்டாள். அந்த விநாடியே பைத்தியம் பிடித்தவள் போல் நகைக்க ஆரம்பித்தவள் அந்த இடத்தை விட்டு ஓடலானாள். அவளைப் பிடிக்க எடுத்துக் கொண்ட அவ்வளவு முயற்சிகளும் வீணாயின.

அதேபோல கேசவ் பிரபுவைக் காப்பாற்ற எடுத்துக் கொண்ட முயற்சிகளும் வீண்தான்! தன் மேனியில் காயம் பட்டதைவிட, ஒரு பெண், அதுவும் தான் பெரும் அளவில் அன்பும் மரியாதையும் வைத்திருந்த பெண் தன்னை இவ்வளவு கேவலமாக நினைத்துவிட்டாளே என்ற வேதனையே பெரிதும் வாட்டியது அவனை. அந்த வேதனைதான் அவன் நிலையைக் கவலைக்கு இடமாக்கியிருக்குமோ என்று கூடப் பலர் எண்ணினர்.

நாராயண் பிரபு தம் தம்பியின் நிலையைப் பார்த்துப் பதறிவிட்டார். தம் ஆசையை எல்லாம் கொட்டி வளர்த்த தம்பி தம்மை விட்டு இவ்வளவு தூரம் விலகிப் போகிறானே! அவனைப் பிடித்து நிறுத்த முடியவில்லையே என்று நினைக்கையில் உள்ளமே வெடிப்பது போல் தோன்றியது அவருக்கு. அருகில் அமர்ந்து அவனை வருடிக் கொடுத்துக் கொண்டிருந்தார் அவர். கண்கள் குளமாக, அந்தக் கம்பீர உருவம், சோகத்தின் பிரதியாகத் தொய்ந்து அமர்ந்திருந்த காட்சி, பார்ப்பவரையெல்லாம் பதைக்கச் செய்தது.

கடைசி மூச்சு உள்ளவரையில், ''சத்தியமாக, நான் காசிநாத்தைக் கொல்லவில்லை அண்ணா! ஷோபாவை அவனுக்குத் திருமணம் செய்து வைப்பதாகத்தான் வாக்குக் கொடுத்தேன், அண்ணா. இதை ஷோபாவிடம் சொல்லுங்கள்!'' என்று மன்றாடிக் கொண்டிருந்தான் கேசவ் பிரபு.

''எனக்குத் தெரியும், தம்பி! நீ சொல்லுவதை நான் நம்புகிறேன்.....!'' என்றார் அவர்.

''ராதாஸ்வாமி கோயில் மிகப் பிரமாதமாக அமைய வேண்டுமென்பதற்காகவே என் சொந்த விருப்பு வெறுப்புக்களைக் கட்டுப்படுத்தவும், தியாகம் செய்யவும் நான் தயாராக இருந்தேனே! காசிநாத்திடம்கூட இதை நான் சொல்லியிருக்கிறேன், அண்ணா!'' எனக் கதறினான் கேசவ் பிரபு.

''உன் உயர்ந்த நோக்கத்தை இந்த உலகம் புரிந்துகொள்ளும் தம்பி. நீ மனத்தை அலட்டிக் கொள்ளாதே!'' என்று பொங்கிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டவாறு சமாதானம் செய்தார் நாராயண் பிரபு.

மன நிம்மதி இல்லாமலேயே மறைந்தான் கேசவ் பிரபு.

நாராயண் பிரபுவுக்கு எல்லாமே வெறுத்து விட்டது. தம் சொத்துக்களையெல்லாம் தம்பியின் மன ஆறுதலுக்காக ராதாஸ்வாமி கோயிலுக்கு எழுதி வைத்துவிட்டுத் துறவியாகிவிட்டார் நாராயண் பிரபு. குழந்தை இல்லாத அவருக்கு வேறு என்னதான் செய்யத் தோன்றும்?

இந்தத் திடீர் மாற்றம் அந்தப் பகுதி மக்களையே சோகத்தில் ஆழ்த்தியது. ராதாஸ்வாமி கோயிலுக்குப் பெருமளவு பணம் சேர்ந்தது. ஆனால் உழைக்க ஆள் இல்லையே! சிற்பிகள் அங்கு போய் வேலை செய்வதென்றால் நடுங்கினர். அப்படி ஒரு 'கிலி' அவர்களைப் பிடித்து ஆட்டியது.

ஒரு மாதத்துக்குப் பிறகு நள்ளிரவில் உளிச் சத்தம் அந்தக் கோயிலில் கேட்டது. முதலில் பிரமையோ என நினைத்த அக்கம் பக்கத்தவர் தொடர்ந்து ஒலி கேட்கவே மெதுவாக வந்து பார்த்தனர். பார்த்தவர்களெல்லாம் பயந்து நடுங்கினர். வாய் பேச வராமல் குழறினர்.

ஆம்! தலைவிரி கோலத்தோடு, காசிநாத் செதுக்க ஆரம்பித்த சிலைகளைப் பூர்த்திசெய்து கொண்டிருந்தாள் ஷோபா. அவள் அருகில் சென்று எதையும் கூறத் தைரியம் இல்லாமல் தவித்தனர் ஊர் மக்கள்.

இரண்டு மூன்று நாட்கள் இது தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. இரவு முழுவதும் வேலை செய்யும் ஒலி கேட்கும். மறு நாள் காலையில் வந்து பார்த்தால் காசிநாத் செதுக்கியது போலவே அருமையான சிலை உருவாகியிருக்கும்.

இந்தக் கோயிலின் திருப்பணி முழுதும் இப்படித்தான் நடக்கப் போகிறதா? எதுவும் புரியாமல் மக்கள் திகைத்தனர். மக்கள் ஆவலோடு கூட்டம் கூட்டமாகச் சென்ற அந்த இடம் இன்று புறக்கணிக்கப்பட்டு விட்டது.

திடீரென்று ஒரு நாள் நடு இரவில், 'வீல்' என்ற ஓர் அலறல் கேட்டது. திடுக்கிட்ட மக்கள் ஓடி வந்து பார்த்தனர். வாயிலிருந்து ரத்தத்தைக் கக்கியவாறு மல்லாந்து விழுந்திருந்தாள் ஷோபா. அவள் உயிர் பிரிந்திருந்தது.

# டேபிள் டென்னிஸ் வீரர் ஜகந்நாத் பிலிப்ஸ் சைக்கிள் உதவியினால் உடல் வளத்தை தெம்புடன் வைத்திருக்கிறார்

டேபிள் டென்னிஸ் பந்தயங்களில் ஜகந்நாத் மிகத் துடிப்புடன் விளையாடுகிறார். இந்தியாவின் தலை சிறந்த விளையாட்டு வீரர் ஜகந்நாத்துக்கு எப்பொழுதும் துடிப்புடன் இருப்பதன் அவசியம் தெரியும். தினசரி தன் பிலிப்ஸ் சைக்கிளில் சவாரி செய்வதன் மூலம் அவர் எப்போதும் தெம்புடன் செயல் படுகிறார். அதில் சந்தேகம் இல்லை. உலகப் புகழ்வாய்ந்த பிலிப்ஸ் ஊக்கமிகு வாலிபர்களுக்கு உகந்தது. கவர்ச்சி யானது. அனாயாசமாய் சவாரி செய்ய வல்லது. காடு முரடான சவாரிக்கும் ஈடுகொடுக்க வல்லது.

கடுமையாக உழைத்து உங்களை எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் செல்லும்.

**ஊக்கமிகு வாலிபர்கள் உகந்து வாங்குவது பிலிப்ஸ் சைக்கிள்.**



TIC/PH/664

# பிலிப்ஸ்

இந்தியாவில் தயாரிப்போர்:

**டி ஐ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா**

அம்பத்தூர், சென்னை-53.

உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட் மெண்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட் பதிவுபெற்று உபயோகிப்போர்.

# அக்கோசெட்-50

உயர்ந்த வெப்ப நிலைகளுக்கான
ஏஸிஸி சிமெண்ட்—எரி
செங்கல்களை
உறுதியாக
இணைக்க
உகந்தது.

**ACC**

உயர் தர
தயாரிப்புக்களுக்கு
உங்கள் உத்தரவாதம்

அக்கோசெட்-50 உபயோகமாகும் நிர்மாண வேலைகள்:

- ஒட்டுப் பூச்சு, ரிபேர் மற்றும் இணைப்பு
- எரிசெங்கல்களை அடுக்கி ஒட்டுதல்
- தரை மற்றும் உலைச் சுவர்கள் மீது பாதுகாப்புக்காக மெழுகுதல்
- மானோலிதிக் லைனிங் வேலை, கனைட்டிங் முதலியன.

ஒரு முறை உலர்த்தி வெப்பப் படுத்தப்பட்ட அக்கோசெட்-50 உலைகளின் பாகமாகி விடுகிறது.

தி சிமெண்ட் மார்கெடிங் கோ. ஆப் இந்தியா லிட். மற்றும் அன்னாரது விநியோகஸ்தர்களிடம் தயாராகக் கிடைக்கிறது.



**தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**

தி சிமெண்ட் மார்கெடிங் கோ. ஆப் இந்தியா லிட்.

ACC. 392. TAM.

அவள் எப்படி மாண்டாள்? அவ்வளவு இரத்தம் வரக் காரணம் என்ன என்பது இன்று வரையில் யாருக்கும் புரியவில்லை.

''ஷோபாவை வைத்துக் காசிநாத் செதுக்கிய சிற்பங்களை இன்று நீங்கள் பார்த்தவை. அதனால்தான் அவற்றின் சாயல்கள் ஒரே மாதிரியாக இருக்கின்றன'' என்று முடித்தார் எங்கள் வழிகாட்டி.

''ஆமாம். அது சரிதான். காசிநாத்தின் மரணத்துக்கும் ஷோபாவின் மரணத்துக்கும் காரணமே தெரியவில்லை. இல்லையா?'' என்று கேட்டேன்.

''ராதாஸ்வாமி கோயில் நிர்மாணத்தில் அப்படி ஒரு நிகழ்ச்சியும் உண்டு என்பதே யாருக்கும் தெரியாதே!''

''மிகவும் பரிதாபப்பட வேண்டிய விஷயம். அவர்கள் இருவரும் வாழ்க்கையில் ஒன்று பட்டிருந்தால் இந்தக் கோயில் வேலையே இதற்குள் பெரும் பங்கு முடிந்திருக்கும்'' என்றேன் தாபத்தோடு.

''தெய்வ கைங்கரியத்தில் ஏற்படும் விசித்திரங்களை என்னவென்று சொல்வது? ஏன் இது நடந்ததோ? என்ன குற்றமோ, யார் கண்டார்கள்?'' என்றார் வழிகாட்டி பிரதாப்.

''நான்கூடக் கேசவ் பிரபுவைச் சந்தேகித்தேன். பாவம்! குற்றம் இல்லாமல் மனவேதனையோடு அவர் மடிந்து விட்டாரே! இவ்வளவு பெரிய பணக்காரருக்கு இப்படி ஒரு பரிதாப முடிவா?'' என வருத்தப் பட்டான் சங்கர்.

''அதுதான் உலகம்!'' என்ற பிரதாப், ''நாழியாகிறது. நான் புறப்படுகிறேன்... நாளைக் காலை புறப்படத் தயாராக இருங்கள்'' எனக் கூறி விடைபெற்றார்.

''உண்மைக் காதலர்களுக்கே ஒரு தலை எழுத்து! அவர்கள் நிம்மதியாகத் திருமணம் செய்து கொண்டு இன்பமாக வாழ முடியாது போல் இருக்கிறது'' என்று மனம் உடைந்து கூறினாள் நந்தினி.

''தாஜ்மகாலுக்குச் சவால் இந்த ராதாஸ்வாமி கோயில் என்கிறார்களே! அது காதலித்து, மணந்து வாழ்ந்ததன் அடையாளம். இது காதலர்கள் மாய்ந்ததன் முத்திரை. இல்லையா?'' என்று தாபத்தோடு குறிப்பிட்டாள் சரளா.

''என்ன செய்வது? எந்த ஒரு பெரும் காரிய சாதனைக்கும், பலருடைய இன்னல்களும் தியாகமும் அடித்தளமாக வேண்டியிருக்கின்றன'' என்றேன் நான்.

''உண்மைதான். ஆனால் அவர்கள் முடிவு எப்படி ஏற்பட்டது? அதில் எந்த நியாயம் இருக்கிறது எனத் தெரிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? அதையும் சேர்த்து இந்தக் கட்டடப் பணியில் குறிப்பிட்டால், கட்டடத்தையே பெரும் மதிப்போடு மக்கள் பார்க்க மாட்டார்களா? உயிரையே கொடுத்த அவர்கள் எல்லாம் நினைவுபடுத்தப்பட வேண்டியவர்கள் இல்லையா?'' என்றான் சங்கர்.

''ஆமாம். அத்தகைய விஷயங்களே, பார்வையாளர்களுக்கு ஒரு பக்தியையும் மதிப்பையும் உண்டாக்கும்'' என்று ஆமோதித்தேன்.

''நூற்றுக்கு நூறு சரி. ஆனால் அவர்கள் முடிவு எப்படி ஏற்பட்டது? என்று புரியவில்லையே!'' என்றான் ஜகன் ஆதங்கத்தோடு.

''ஏன்டா, ஜகன், நீதான் ஆவியெல்லாம் கூப்பிடலாம், அவர்களோடு பேசிப் பல விஷயங்களைப் புரிந்து கொள்ளலாம் என்றாயே! அதை இப்பொழுது முயன்று பார்த்தால் என்ன?'' என்று கேட்டான் சங்கர் ஆவல் பொங்க.

''நல்ல யோசனை ஜகன். காசிநாத்தையும், கேசவ் பிரபுவையும், ஷோபாவையும் அழைத்தால் விஷயம் தெளிவாகிவிடுமே!'' எனப் பக்கபலமாகக் கூறினேன் நான்.

''ஆவிகளைக் கூப்பிடுவதா? அப்பப்பா! எத்தனை விபரீதமான செயல்? அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். எதற்காக இந்த வீண் விவகாரமெல்லாம்?'' எனப் பதறினாள், சரளா, சங்கரின் பேச்சைக் கேட்ட மாத்திரத்திலேயே.

''ஆவிகளைக் கூப்பிடலாம் என்று சொன்னால், அதற்கு இவ்வளவு பயமா? அவை நம்மை எதுவும் செய்து விடாது. மேலும்,



## பேயை விரட்டிய புலவன்

ஒரு சமயம் போஜ ராஜன் ஒரு வழிப்போக்கர் தங்கும் விடுதியைக் கட்டினான். ஆனால் அதில் ஒரு பேய் குடிகொண்டு தங்க வந்த மக்களைக் கொன்றது. பேயை விரட்டக் காளிதாஸன் முன் வந்தான். விடுதிக்குச் சென்று தங்கினான்.

பிசாசு வந்து ஒவ்வொரு ஜாமத்திலும் தான் கேட்கும் கேள்விகளுக்குச் சரியான பதில் கூறி விட்டால் கொன்றுவிடுவேன் என்றது. புலவன் இணங்கினான்.

''ஒவ்வொரு மனிதனிடமும் உள்ள இரண்டு. இது எவை?'' என்றது பேய்.

புலவன் சொன்னான்: ''ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு சந்தர்ப்பங்கள் உண்டு. ஒன்று நல்லது; மற்றொன்று தீயது!''

திருப்தியுற்ற பேய் சென்றுவிட்டது. இதுபோல் ஒவ்வொரு ஜாமத்திலும் புலவன் பேயை வென்றான். இறுதி ஜாமத்தில் புலவன் பேயை மடக்கினான்: ''எனது கேள்விக்கு இப்போது நீ பதிலளிக்க வேண்டும். இல்லையேல் இந்த விடுதியைக் காலி செய்துவிட வேண்டும்'' என்றான். பேய் இணங்கியது.

''ஒரு கம்பு இருக்கிறது. அதன் எல்லாப் பக்கங்களும் ஒரே மாதிரியாக உருண்டையாக ஆக்கப் பட்டுள்ளது. இதன் அடிப்பக்கம் எது? மேல் பக்கம் எது?'' என்றான் புலவன்.

பேய் திருதிருவென்று விழித்தது.

புலவனே பதிலைச் சொன்னான்: ''அந்தக் குச்சியைத் தண்ணீரில் மிதக்க விட்டால் நீரில் அமுங்குவது அடிப்பக்கம், மேலே தெரிவது மேல் பக்கம்'' என்று.

வெட்கித் தலைகுனிந்த பேய் விடுதியைக் காலி செய்தது.

ஆதாரம்: பவன்ஸ்
தகவல்: ஞானமொழியாளன்



தன் சகோதரன் ஆபத்தான நிலையில் இருக்கிறான். போக வேண்டும் என அலுவலகப் பையன் மானேஜரிடம் அனுமதி வாங்கிக் கொண்டு விளையாட்டு மைதானத்துக்குப் போய்விட்டான் பந்தயங்களை ரசிக்க!

அங்கே அவனைச் சந்தித்த மானேஜர் ''ஏன் தம்பி, உன் சகோதரனுக்கு ஆபத்து என்றாயே!'' என்று கேட்க, ''பார்த்தால் நிலைமை அப்படித் தான் இருக்கிறது, ஸார்... என் சகோதரன் தான் இங்கே 'அம்பயர்' '' என்றான் பட்டென்று.

''லயா''

---

அந்த ஒரு வழிதானே இப்பொழுது உண்மையைத் தெரிந்து கொள்ள இருக்கிறது? அதை விட்டால் நடந்த சம்பவங்களை அறியவே வழி இடையாதே !''

''அதுவும் சரிதான். முயற்சி செய்துதான் பார்ப்போமே!'' என மற்றவர்கள் கூறவும் ஜகனும் ஒப்புக் கொண்டான்.

''இந்த மாதிரி இடங்களில் எல்லாம் ஆவிகளைக் கூப்பிட முடியாது. நாம் ஏதாவது ஓர் அறைக்குச் சென்றுதான் முயன்று பார்க்க வேண்டும்'' என்றான் ஜகன்.

''முயன்று பார்க்க வேண்டும் என்று சொல்லாதே, ஜகன். கண்டிப்பாகக் காசிநாத்தின் ஆவியோ, கேசவ் பிரபுவின் ஆவியோ ஷோபாவின் ஆவியோ வந்தே தீரவேண்டும். இந்தச் செய்கையை ராதாஸ்வாமி கோயிலுக்கு நம்மால் செய்யப்படும் பெரும் தொண்டு என்றுகூடச் சொல்லலாம். அவர்கள் என்ன உணர்ச்சிகளை, பெரும் ஆசைகளை உள்ளத்தில் அடக்கிக் கொண்டிருந்தார்களோ, அவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?''

ஜகன் தயங்கினான்.

''என்னடா, இது? இவ்வளவு நாட்கள் என்னவோ, படித்து ஆராய்ச்சி செய்தாய். சமயம் வரும்பொழுது பின்னுக்குப் போகிறாயே!'' என்று நான் சீண்டினேன்.

''நான் படித்ததும், ஆராய்ச்சிகளைப் பற்றி விவரம் சேகரித்ததும் உண்மைதான் ! ஆனால் இதுவரையில் ஒரு முறைகூட அவைகளை வரவழைக்கும் முயற்சியில் ஈடுபட்டதில்லையே ! அதனால்தான் யோசிக்கிறேன்'' என்றான் ஜகன் தயங்கியவாறு.

''ஆவிகளைக் கூப்பிட்டு அவை வந்தாலும், அவை நமக்குப் புரியாத மொழியில் அல்லவா பேசும்!'' நியாயமான ஒரு பிரச்னையைக் கிளப்பி விட்டாள் நந்தினி.

அவள் சொன்னதைக் கேட்டதும், நானும் சற்றுப் பிரமித்தேன். ''ஆமாம், அந்த ஆவியை வரவழைப்பதில் வெற்றி பெற்றாலும் அவர்கள் மொழியில் பேசினால் எப்படிப் புரிந்து கொள்வது? இந்தப் பக்கத்து மொழி தெரிந்தவர்கள் யாராவது உடன் இருந்தால் வசதியாக இருக்கும்!'' என்றேன்.

இதுவரையில் வழிகாட்டி பிரதாப் கூறிய வரலாறுகளில் நாங்கள் காட்டிய ஆர்வத்தை எங்களுடன் இருந்தே பார்த்துக் கொண்டிருந்த ஒருவன், ''இந்தக் கட்டடத்தின் பாதுகாப்பாளன்கூட ஆவிகளை வரவழைத்து அவற்றுடன் பேசுவதில் நிபுணன். பல முறை அவன் அவ்வாறு ஆவிகளை வரவழைத்துப் பேசுவதை நானே பார்த்திருக்கிறேன். அவனுக்கு இந்தப் பகுதி மொழி நன்றாகத் தெரியுமாதலால் அவனை நீங்கள் உதவி கேட்கலாமே!'' என யோசனை கூறினான்.

கூட இருந்த எல்லாருமே ஆனந்தத்தினால் ஒரு முறை துள்ளிக் குதித்தனர். ''அப்படியே செய்வோமே!'' என்றனர் ஒருமித்த குரலில்.

அது சரியாக வருமா என்ற அச்சம் ஜகனுக்கு இருந்தாலும், பழக்கப்பட்டவன் ஒருவன் இருக்கிறான் என்றதும் முயன்று பார்ப்போமே என்ற தைரியம் அவனுக்கு வந்தது.

கட்டடப் பாதுகாப்பாளன் சோஹல் வந்தான். தான் வரவழைத்துப் பேசிய ஆவிகளைப் பற்றிப் பிரமாதமாகக் கூறினான். அவன் கூறுவதைக் கேட்கும்போதே எங்களுக்கெல்லாம் மெய்சிலிர்த்தது.

'' காசிநாத்தின், ஆவியை அழைத்திருக்கிறாயோ ?'' என வினவினேன்.

''இல்லை, சாப்!'' என்றான் சோஹல்.

''ஏன்?''

''இதுவரையில் அழைக்க வேண்டும் என்று தோன்றாததுதான் காரணம் '' என்றான் அவன்.

''இப்பொழுது முயல்வோமா?''

''கண்டிப்பாகச் செய்வோம். வாருங்கள்!'' என்றான்.

'அதுதான் சரி' என்று நாங்களும் அவனைத் தொடர்ந்தோம். அவனும் ஆவியுலக வெற்றியைப் பற்றியும், அவைகளின் குணங்களையும் அவை வரும் பொழுது நடந்து கொள்ள வேண்டிய முறைகளையும் விவரித்துக் கொண்டு நடந்தான்.

சாதனைக்கான குறிப்புக்களை அவனிடமிருந்து பாங்காகப் புரிந்து கொண்டோம். நடு நடுவே ஜகன் தன் ஆராய்ச்சிப் படிப்பின் அடிப்படையில் கூறியதற்கும் அவனும் சரியாகப் பதில் கூறி வந்தான்.

நந்தினியும் சரளாவும் மட்டும் '' இந்த விபரீத முயற்சி வேண்டாம்'' என்று வற்புறுத்திக் கூறினர்.

''சரித்திர உண்மையை அறிந்து கொள்ள வேண்டுமானால், சில துணிகரமான செயல்களையும் செய்யத்தான் வேண்டும். நீ தயங்காமல் ஆரம்பி, ஜகன்!'' என்றேன் நான்.

''நாம் ஒழுங்காக ஊருக்குத் திரும்பிப் போக வேண்டாமா? இந்த வீண் விவகாரமெல்லாம் எதற்கு?'' என்று பரிதாபமாகக் கேட்டாள் சரளா. நந்தினியும் இதை ஆமோதிப்பது போல் அவளோடு சேர்ந்து நின்றாள்.

''உங்கள் இருவருக்கும் அவ்வளவு நடுக்கமாக இருந்தால் நீங்கள் இருவரும் அந்த அறைப் பக்கம் வரவேண்டாம். நாங்கள் மட்டும் போய்ப் பார்க்கிறோம்'' என்றான் சங்கர்.

''வேண்டாம், வேண்டாம். உங்களுக்கெல்லாம் ஏதாவது ஆகிவிட்டதென்றால்,

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி நீலம்

ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை . வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு. இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது






தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மென்ட்ஸ்
லிமிடெட், அம்பத்தூர், சென்னை 53

UPL/6546


CHANDRIKA
AYURVEDIC
SOAP
சந்திரிகா

நாங்கள் என்ன செய்வது ?'' என்று பதறினாள் சரளா.

''எது ஆனாலும் எல்லாருக்கும் சேர்ந்தே ஆகட்டும். நாங்களும் உங்களுடனே வருகிறோம்'' என்றாள் நந்தினி அழுத்தமாக.

''நீங்களெல்லாம் படித்த பெண்கள். இப்படியா பயப்படுவது?'' என்று தோளைக் குலுக்கிக் கொண்டான் சங்கர்.

''மனிதன் சந்திர மண்டலத்துக்கே போகும் இந்த நாளிலும் இப்படியொரு பயமா?'' என்று ஜகன் கேட்டான்.

''இப்படிப் பேசுவதால் உங்கள் ஏற்பாடு கெட்டிக்காரத்தனமானது என்று நாங்கள் ஏற்றுக் கொண்டுவிட்டதாக நினைக்க வேண்டாம். எது எப்படியானாலும் உங்களுடனே இருந்துவிடுவது மேல் என்று நினைக்கிறோம். அவ்வளவுதான்!'' எனத் தன் தீர்மானத்தை அழுத்தமாகக் கூறினாள் நந்தினி.

நாங்கள் மூவரும் நகைத்தோம்.

சோனால் மாளிகையின் கோடிப் பகுதி அறைக்கு அழைத்துச் சென்றான். நடந்தால் கூடச் சத்தம் ஏற்பட முடியாத கம்பள விரிப்பை விரித்தான்.

எங்களைப் பாதி வட்டமாக அமரச் சொன்னான். அதிக உயரம் இல்லாத ஒரு சின்ன மேஜையை நடுவில் போட்டான். எங்கிருந்தோ சில மெழுகுவத்திகளைக் கொண்டு வந்தான்.

அதில் ஒன்று 'கணேஷ்' மெழுகுவத்தியாம். முதலில் அதை ஏற்றி முதல் கடவுளான கணபதியிடம் பிரார்த்தனை செய்து கொண்ட பிறகுதான் எதையும் ஆரம்பிக்க வேண்டுமாம்.

எங்களுக்கு எதிரில் அறையின் குறுக்காக ஒரு வெள்ளைத் துணி கட்டப்பட்டிருந்தது.

அப்பொழுது கூர்க்கா, ''மாளிகைக் காப்பாளன் இந்த ஆவிகளை வரவழைத்தால், பரிசாக அவனுக்கு எத்தனை ரூபாய்கள் கொடுப்பீர்கள் என்று கேட்கிறான்'' என்றான்.

''எத்தனை ரூபாய் கொடுக்க வேண்டும் என்று கேளேன்'' என்றான் ஜகன்.

போய்த் திரும்பி வந்த கூர்க்கா, ''மூன்று ஆவிகளையும் வரவழைத்தால், நூறு ரூபாய் அவனுக்குத் தர வேண்டுமாம்'' என்றான்.

''நூறு ரூபாயா? அது மிகவும் அதிகப்படி. இந்த விவகாரமே வேண்டாம். நிறுத்திவிடுவோம்'' என்றேன் நான்.

''உடனேயே இப்படியோர் அவசர முடிவுக்கு ஏன் வருகிறாய், ரகு? அந்த ஆவிகளை அவன் வரவழைத்த பிறகுதானே நாம் பணத்தைத் தரப் போகிறோம்? ஒரு பெரிய உண்மையைத் தெரிந்துகொள்ள நூறுரூபாய் செலவு செய்யக் கூடாதா ?'' என்று சங்கர் விவாதித்தான். ஜகனும் அவனும் மிகவும் உறுதியாக இருந்தனர்.

தொடர்ந்து அந்த அறையின் கதவுகளையெல்லாம் மூடினான் சோனால். ''யாரும் எவ்வித சத்தமும் போடக் கூடாது. சிறிது சத்தம் போட்டால்கூட ஆவி ஓடிப் போய்விடும்'' என்று எங்களை எச்சரித்தான்.

நாங்கள் எல்லோரும் மௌனமாக அமர்ந்திருந்தோம்.

'கணேஷ் வத்தி'யை ஏற்றிப் பிரார்த்தனை செய்தான் சோனால். பிறகு, ''இந்த வத்தியை அணைக்கப் போகிறேன். விளக்கு இருந்தால் ஆவி வராது. நீங்கள் எல்லாரும் அமைதியாக இருக்க வேண்டும். சப்தம் செய்தால் ஆவி கோபித்துக் கொண்டு சென்று விடும்'' என்று மீண்டும் எச்சரித்தான்.

சரளாவும் நந்தினியும் தங்கள் கரங்களைப் பிணைத்து இறுகப் பற்றிக் கொண்டனர். மெழுகுவத்தி அணைக்கப்பட்டது. கேசவ் பிரபுவின் ஆவியை அழைத்தான் சோனால். அதைப் பெருமையாக உயர்த்திக் கூறிப் பல முறை அழைத்தான். உருக்கமாக வேண்டினான். திடீரென்று அறையில் ஜில்லென்ற காற்று பரவியது. திரையில் சலனம் ஏற்படுவது போன்ற ஒலி ஏற்பட்டது.

சோனால், மிகவும் மெதுவான குரலில், ''வருகிறது, வருகிறது'' என்றான். தன்னிடமிருந்த டார்ச்சைச் சட்டென்று திரையின் மேல் பாய்ச்சினான். அதில் ஒரு கரிய உருவம் தெரிந்தது.

அதனைப் பார்த்ததும் நாங்கள் வியர்த்துப் போனோம்.

இடது கரத்தை நீட்டி, ''விளக்கை அணை'' என்று பயங்கரமாகக் கத்தியது அந்த உருவம். அதன் குரலே கடுமையாக இருந்தது. ''விளக்கு இருந்தால் நான் போய்விடுவேன்'' எனக் குதித்தது. சட்டென்று டார்ச்சை அணைத்து விட்டு, ''நீ யார்?'' என்று கேட்டான் சோனால்.

''இளைய ஜமீந்தார் கேசவ் பிரபு!'' என்றது அது.

''நீ ஏன் காசிநாத்தை விஷமிட்டுக் கொன்றாய்? ஷோபாவை மணக்க வேண்டும் என்ற ஆவலினால்தானே?''

''நான் காசிநாத்தைக் கொல்லவில்லை. அது தவறு. அவனைக் கொல்ல வேண்டும் என்று நினைத்ததுகூட இல்லை. இது சத்தியம்.''

''பின் ஏன் தனித்து அழைத்துச் சென்றாய் அவனை?''

''என் செல்வாக்கையும், வசதியையும் காட்டி, ஷோபாவை மணக்கத் தகுதியானவன்

### பிரிட்டனுக்குப் போயுமா பித்தலாட்டம்?



இங்கிலாந்தில் இருக்கும் சில இந்தியர்கள் வருமான வரி தராமல் ஏமாற்றுகிறார்கள். 18 வயதுப் பையன் தனக்கு இந்தியாவில் மனைவியும் குழந்தைகளும் இருப்பதாகச் சொல்லி வரிச் சலுகைபெறுவான். அடுத்த ஆண்டு இரட்டைக் குழந்தைகள் பிறந்திருப்பதாகச் சொல்லி இன்னும் சலுகை பெறுவான். பிறகு உண்மையாகவே திருமணம் செய்து கொள்ளும்போது தனது 'முதல் மனைவி'க்கு ஒரு மரண சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்து விடுவான். எப்படி? -இல்லஸ்டிரேட்டட் வீக்லி - ''நாயக்''

நான் என்ற முடிவுக்கு அவன் தானாகவே வரவேண்டும் என்ற நினைப்பில் அழைத்துச் சென்றேன்.''

''நீ எதிர்பார்த்தது போல் காசிநாத் உன் அந்தஸ்தைப் பார்த்துப் பயந்தானா?''

''நான் இளைய ஜமீந்தார். என்னை ஒருமையில் பேசினால் உன் மேல் பாய்ந்துவிடுவேன்'' என்று உறுமியது ஆவி.

''மன்னிக்க வேண்டும். இனிக் கவனமாக இருப்பேன். தாங்கள் பதில் கூறுவீர்களா?''

காற்று 'விர் விர்' என்று பாய்ந்தது. எல்லாக் கதவுகளும் மூடியிருக்கையில் காற்று வருவதும் விநோதம்தானே !

''காசிநாத்தை என்னுடன் அழைத்துச் செல்லும் பொழுதுதான் உண்மையிலேயே அவன் எத்தகைய ஆழ்ந்த அன்பு ஷோபாவின் மேல் வைத்திருக்கிறான் என்பது எனக்குப் புரிந்தது. அவளும், அவன் மேல்தான் உயிரையே வைத்திருக்கிறாள் என்பதையும் தெரிந்து கொண்டேன். 'இப்படித் தெய்வீக அன்பு கொண்டவர்களைப் பிரிப்பதே பாவம். இத்தகைய இதயபூர்வமான அன்பைத் துண்டிப்பது மனுஷத்தனமா?' என்றுதோன்றியது. அந்த விநாடியே, அவனுக்கு உற்ற தோழனாகி அவனுக்கும் ஷோபாவுக்கும் திருமணம் செய்து வைத்துவிட வேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டேன்'' என்று வேகமாகக் கூறியது ஆவி.

''நீங்கள் சொல்வது உண்மையானால், காசிநாத் திரும்பி வந்தவுடன் எப்படி நுரை கக்கி மயங்கிச் சுருண்டு வீழ்ந்தான்? அவன் இறந்ததைப் பார்த்தால், ஏதோ விஷம் உள்ளே சென்றதால் மாண்டுவிட்டான் என்று நினைக்க அல்லவோ தோன்றுகிறது?'' என்று சோனல் விடாமல் கேட்டான்.

''காசிநாத்தின் மேல் ஏற்பட்ட மோகத்தால் அவளைப் பாராட்டி அவனுக்குப் பல பரிசுகளும் கொடுத்த நான், அவனுக்கும் ஷோபாவுக்கும் மிகவும் சிறப்பாகத் திருமணத்தை நானே நடத்தி வைப்பதாக வாக்குக் கொடுத்தேன். எனக்காகத் தங்க ரேக் போட்டுக் காய்ச்சிய பாலை அவனுக்குப் பருகக் கொடுத்தேன். அங்குதான் நான் மாபெரும் தவறு செய்துவிட்டேன்.

''என் முறைப் பெண் ஒருத்தி என்னை மணந்து கொள்ள வேண்டும் என்று மனக் கோட்டை கட்டியிருந்தாள். என் நாட்டம் ஷோபாவின் மேல் பாய்கிறது எனப் புரிந்து கொண்டவுடன் என்னைத் தீர்த்துக் கட்டவும் அவள் தீர்மானித்துவிட்டாள். அந்தத் திட்டத்தில்தான், எனக்காகப் பாலில் விஷத்தைக் கலந்து அவள் வைத்திருக்கிறாள். இதனை அறியாத நான், தங்கரேக் போட்ட பாலாயிற்றே என நண்பனுக்குக் கொடுத்தேன். கள்ளமில்லாக் காசிநாத், சுவைத்து அதனைப் பருகினான். ஐயோ, நான் ஏன் அவனுக்கு அந்தப் பாலைக் கொடுத்தேன் !'' ஆவி துடியாய்த் துடிப்பது, குரலிலேயே நன்றாகத் தெரிந்தது.

''என்னால் இனிமேல் பேச முடியாது. நான் போகிறேன்'' என உரக்கக் கத்தியது.

அடுத்த விநாடி திரை சலசலத்தது. காற்று ஜில்லென்று புகுந்தது.

சோனல் மெழுகுவத்தியைக் கொளுத்தி ஒளி ஏற்படுத்திப் பார்த்த பொழுது எங்கள் முகத்தில் எல்லாம் வியர்வை முத்துக்கள் நிரம்பியிருந்தன.

''பிரமாதம்!'' என்றான் சங்கர்.

''நன்றி, சோனல். சற்றும் தயங்காமல் காசிநாத்தையும் அழைத்துவிடு. கேசவ் பிரபு கூறியதெல்லாம் உண்மைதானா என்று தெரிந்து கொண்டுவிடுவோம்'' என்றான் ஜகன்.

மறுபடியும் விளக்குகள் அணைக்கப்பட்டன. பிரார்த்தனை செய்யப்பட்டது.

திரை சலசலத்தது. காற்று 'ஜில்'லென்று வீசியது. ''என்னை ஏன் கூப்பிட்டீர்கள் ?'' என்று கேட்டவாறே ஆவி தான் வந்திருப்பதைத் தெரிவித்தது.

இந்த முறையும் டார்ச் அடிக்கப்பட்ட போது ஆவி இடது கையை உயர்த்தி ஒளியைப் போக்குமாறு கத்தியது.

சோனல் உடனே அந்த ஒளியை அணைத்து விட்டான்.

''உங்களைக் கொன்றது கேசவ் பிரபுவா?'' என்று அழுத்திக் கேட்டான் சோனல்.

''இல்லை, இல்லை. கேசவ் பிரபு என் மதிப்புக்குரிய நண்பர். ஷோபாதான் விஷயத்தைப் புரிந்து கொள்ளாமல் அவரைக் கொன்றுவிட்டாள், பைத்தியக்காரி! அந்த ஒரு நல்ல மனிதன் இருந்திருந்தால் இந்தக் கோயிலின் வேலை எவ்வளவோ முன்னேறியிருக்கும்..... அவசரக்காரி. ஆத்திரத்தில் புத்தி பேதலித்துப் போய் விட்டாளே!'' குரலில் தொனித்த தாபத்தை நாங்கள் உணர்ந்தோம்.

''ஷோபாவைக் கொன்றது யார் ? அவள் ரத்தம் கக்கிக் கிடந்தாளாமே!'' விடாமல் கேட்டான் சோனல்.

''கொன்றார்கள் என்று கூறாதே ! பகல் எல்லாம் பைத்தியக்காரி போல் எங்கெங்கோ சுற்றி, இரவு, நான் எடுத்த வேலையை முடிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் அவள் உளியை எடுத்து வேலை செய்தது என்னைக் குத்தியது. அவளால் அந்தக் கடுமையான வேலையைச் செய்ய முடியாது என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஜோடி இழந்து, அவள் அலைந்த பரிதாபத்தைப் பார்த்த பொழுது எப்படியாவது அவளை என்னுடன் அழைத்துக் கொண்டுவிட வேண்டும் என நினைத்தேன். அவள் மலர் உள்ளமும், உடலும் வெம்புவதை நான் பார்த்துக் கொண்டு இருக்கத்தான் முடியுமா ? இதனால்தான், ஓர் இரவு. அவள் பட்டுக் கன்னத்தில் ஒரு பேய் அறை கொடுத்து மாண்டு போகச் செய்துவிட்டேன். அந்த அசுர அடியால்தான் அவள் ரத்தத்தைக் கக்கி உயிரை விட்டு விட்டாள்.''

''அப்படியானால் ஷோபா உங்களுடன் தான் இருக்கிறாளா?'' என்று ஆவல் அதிகரிக்கக் கேட்டான் சோனல்.

இந்தக் கேள்வி எங்களையும் சற்றுக் காதைத் தீட்டிக் கொள்ள வைத்தது.

கலகலவென்று சிரித்தான் காசிநாத். ''எங்கள் உலகில் உடன் இருக்க என்ன தடை ? நாங்கள் சேர்ந்துதான் இப்பொழுது இருக்கிறோம். இன்னும் சொல்லப் போனால் மிக மகிழ்ச்சியாகக்கூட இருக்கிறோம். ஆனால் ராதாஸ்வாமி கோயில் தொண்டு இன்னும்

# பெண்மையின் மென்மையை உணர ஆண்களைப் போல் 'ஷேவ்' செய்யாதீர்!

ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர் தடவி பெண்மை வழியிலே உரோமத்தை வழித்தெறியுங்கள். அது மென்மையானது, இன்மணம் கொண்டது. உரோமங்களின் வேர்கள் வரை ஊடுருவிச் செயல் புரிகிறது. வெட்டுக்கள் இல்லை, உரோமத் துகள்கள் இல்லை. வாரக் கணக்கில் வழவழப்பான சருமம்.




## பட்டுப்போன்ற கரங்களுக்கும் கால்களுக்கும்.

## ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர்

ட்ரேட்மார்க்கின் ரெஜிஸ்டர்ட் யூஸர்: ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிட்.　　95-AF-172-Tam.

பூர்த்தியாகவில்லையே என்ற தாபம்தான் இன்னும் இருக்கிறது'' என வருத்தத்துடன் கூறிய ஆவியின் குரல் கம்மியிருந்தது.

''மன்னிக்க வேண்டும். உங்கள் வேதனையைப் பெருக்கிவிட்டோம்'' என்று பணிவாகக் கூறினான் சோனுல்.

''நான் போகிறேன்'' என எங்கள் பதிலுக்குக் காத்து நிற்காமல் புறப்பட்டது.

'விர்' என்று அறையில் நுழைந்த காற்று, ஆவியின் மறைவை எங்களுக்கு எடுத்துச் சொல்லியது.

திரும்பவும் அறையில் விளக்கு எரிந்தது.

**நா**ங்கள் எல்லோரும் ஓரளவு பிரமை பிடித்து உட்கார்ந்திருந்தோம். ''நாம் தவறாகக் கருதிவிட்டோமே. இருவருமே உயர்ந்த எண்ணங்களோடுதான் இருந்திருக்கிறார்கள்'' என்று கூறிக் கொண்டோம்.

''அந்தப் பெண்ணையும் கூப்பிட்டுப் பார்த்துவிடலாமா?'' என்று வினவினான், சோனுல்.

''கண்டிப்பாக, ஷோபாவின் ஆவியை வரவழைத்தே தீர வேண்டும். அப்பொழுதுதான் உண்மையான முடிவு தெரியும்!'' என அனைவரும் ஒருமித்துக் கூறினோம்.

திரும்பவும் மெழுகுவத்தி மிளிர்ந்தது. பிரார்த்தனை நடந்தது. விளக்குகள் அணைக்கப்பட்டன.

காற்று 'விர்' என்று அறையில் பாய்ந்தது.

ஜல் ஜல் என்று சதங்கைச் சத்தமும், வளையல்களின் குலுங்கல்களும் காதில் ஒலித்தன.

''வந்துவிட்டாள், வந்து விட்டாள்!'' என்றான் சோனுல் மெல்லிய குரலில்.

வழக்கப்படி, திடீரென்று அவன் டார்ச் ஒளியைப் பாய்ச்சினான். பெண் குரல் கத்தியது. அதன் பாவாடை அசைந்தது. வளையல்கள் குலுங்கின. அதுவும் இடது கையால் விளக்கை அணைக்கும்படி சைகை காட்டியது.

சோனுல் பட்டென்று அணைத்துவிட்டான்.

''கேசவ் பிரபுவும், காசிநாத்தும் சொன்னது உண்மைதானா?'' என்று கேட்டான்.

''அவ்வளவும் உண்மைதான். நான்தான் உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் கேசவ் பிரபுவின் மீது உளியை வீசி எறிந்து கொன்றுவிட்டேன். இவராவது சற்றுப் பொறுமையாக இருந்திருக்கணும். அவர் ஆரம்பித்த வேலையை முடித்துவிட வேண்டும் என்ற முழுமூச்சோடு ஈடுபட்டிருந்த என்னை அவசரப்பட்டுத் தம்மிடம் அழைத்துக் கொண்டுவிட்டார். இன்னும் சில நாட்கள் இருந்திருந்தால் ஏதோ எங்கள் காணிக்கையாக அந்த வேலையாவது பூர்த்தியாகியிருக்கும். அதுதான் ஒரே வேதனை,....'' அவள் குரலிலும் குறை தெரிந்தது.

''ராதாஸ்வாமி கோயில் பக்கம் நீங்கள் போவதுண்டா?'' என்று கேட்டான் சோனுல்.

''ஆகா! போய்க் கொண்டிருக்கிறோம். எத்தனையோ முறை, அந்தச் சிற்பிகளிடையே அவர்கள் அறியாமல் புகுந்து அவர்கள் வேலை திறம்பட அமைய உதவுவோமே! எங்கள் எண்ணம் எல்லாம் எப்படியாவது ராதாஸ்வாமி கோயில் வேலை நன்றாக அமைந்துவிட வேண்டும் என்பதுதான்! ஹூம், எங்களுக்கு மகன் பிறந்தால்கூட இதில் வேலை செய்ய வைக்க வேண்டும் என்றெல்லாம் திட்டமிட்டோமே!'' அவள் பொறுக்காமல் விசிக்க ஆரம்பித்துவிட்டாள்.

''மன்னிக்க வேண்டும். உங்களைத் தொந்தரவு செய்துவிட்டோம்'' என்று சோனுல் மன்னிப்புக் கேட்டான்.

''நான் அப்படிக் கருதவில்லை. இத்தனை வருஷங்களுக்குப் பிறகாவது, என்னை அழைத்தீர்களே! உங்களை மிகவும் நம்பிக்கையோடு கேட்டுக் கொள்கிறேன். மக்களுக்கு எங்கள் உண்மையான மன நிலையை எடுத்துச் சொல்லுங்கள். ராதாஸ்வாமி கோயிலுக்காகவே அர்ப்பணித்துக் கொண்ட எங்களைப் பற்றி தயவு செய்து தவறான வகையில் பேசிக் கொண்டிருக்க வேண்டாம்'' என்றது ஆவி.

''இனி அப்படி யாரும் பேசமாட்டோம். வேறு யாரையும் பேசவிட மாட்டோம். நாங்கள் உறுதி கூறுகிறோம்'' என அடித்துக் கூறினான் சோனுல்.

அதைக் கேட்ட உற்சாகத்தில், ஜல், ஜல் என்று ஒலி எழுப்பிக் கொண்டு அந்த ஆவி ஓடியதை நன்றாக உணர முடிந்தது.

அது போய்விட்டது எனத் தெரிந்ததும், திரும்பவும் விளக்குகள் ஒளி வீசின.

---

## வேலை எப்படி ?



கட்டிய வீட்டுக்குப் பழுது சொல்லும் பழக்கம் இன்று நேற்றல்ல..... காலம் காலமாக இருந்து வந்திருக்கிறது.

ஒரு தடவை மைக்கேல் ஏஞ்சலோவின் கலைக் கூடத்துக்கு வந்த நண்பர் ஒருவர், ''இந்தச் சிலை பிரமாதமாக இருக்கிறது. ஆனால் மூக்குச் சற்று நீளம்'' என்றார்.

மாதக்கணக்காகப் பார்த்துப் பார்த்துச் செய்த சிலையில் பழுது சொல்கிறாரே என்று ஏஞ்சலோ கலங்கவில்லை......

'' அப்படியா ? இருந்துத்தான் உங்களைப் போன்ற ரசிகர்கள் வந்து பார்த்து அபிப்பிராயம் சொல்ல வேண்டும் என்பது'' என்று புன்னகையுடன் கூறிவிட்டு, உடனேயே கையில் சிற்றுளி சுத்தியலுடன் சாரத்தின் மேலே ஏறி அவர் குறிப்பிட்ட இடத்தண்டை சென்று டக்டக்கென்று தட்ட ஆரம்பித்தார்.

சலவைக் கற்தூள்கள் கீழே விழ விழ....சிறிது நேரத்தில் வேலை பூர்த்தியாகிவிட்டது.

''இப்போது எப்படி?'' என்று கீழே வந்த ஏஞ்சலோ நண்பரைக் கேட்டதும், ''ஆகா! அற்புதம்! பிரமாதமாக இருக்கிறது'' என்று ஒரேயடியாகப் புகழ்ந்தார் நண்பர்.

உண்மையில் மைக்கேலின் உளி சிலையின் மூக்கைத் தீண்டவேயில்லை. தயாராகக் கையில் வைத்திருந்த சலவைக் கல் தூளை நண்பரின் திருப்திக்காக மேலே ஏறி ஓசைப்படுத்தும்போது கீழே போட்டார் என்பது பாவம் அந்த நண்பருக்குத் தெரியாது!

--'தழல்'

சோனால் அளவுக்கு மீறிய களைப்புடன் காணப்பட்டான்.

''ஆவிகளை வரவழைப்பதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அதில் எனக்கு நம்பிக்கை இருந்தாலும், உங்களைப் போல் இவ்வளவு வெற்றிகரமாக வரவழைக்க எனக்குத் தெரியாது'' என்றான் ஜகன்.

''அவர்களுடன் உள்ள பரிச்சயம்தான் என் வெற்றிக்குக் காரணம்'' என்றான் சோனால்.

ஜகனும், சங்கரும் தங்கள் மன நிறைவைத் தெரிவித்தனர். சற்று கூடப் பேரம் செய்யாமல் பேசிய தொகையைக் கூர்க்கா சாட்சியாகச் சோனாலுக்குத் தந்தனர்.

பெரியதோர் உண்மையை, இத்தனை வருடங்களாக, பலருக்குப் பிரச்னையாக இருந்த விஷயத்தைச் சாமர்த்தியமாக அறிந்து கொண்டுவிட்டோம் என்ற நினைப்பே எங்களுக்கெல்லாம் தனி உவகையை அளித்தது என்பதைக் கூறவும் வேண்டுமா?

'சரி, சற்று நேரமாவது உறங்கலாம்' என மாளிகையின் மற்றொரு பகுதிக்குப் போனோம். எவ்வளவோ கூறியும், சரளாவும் நந்தினியும் உறங்கவே மறுத்துவிட்டனர். ஆவிகளைப் பார்த்த, அவைகளின் குரலைக் கேட்ட பீதி இன்னும் அவர்களை விட்டுப் போகவில்லை.

ஒருவாறாக இரவு சென்று பகலும் புலர்ந்தது. முதல்நாள் இரவு நடந்த சம்பவங்களை நினைத்தவாறே பால்கனியின் அருகில் உலவிக் கொண்டிருந்தேன்.

''ரகு, நேற்று இரவு என்னுடைய சாவிக் கொத்தை ஆவியைப் பார்த்த அறையிலேயே விட்டுவிட்டேன். போய் எடுத்து வரலாமா?'' என்றான் ஜகன்.

''நல்ல வேளை. இப்பொழுதாவது ஞாபகம் வந்ததே! வா, போவோம்!'' என்றேன்.

''அந்த ஆவி சாவியை எடுத்துக்கொண்டு போயிருக்காதே ....!'' என்று சிரித்துக் கொண்டே எங்களுடன் நடந்தான் சங்கர்.

மறு கோடியில் உள்ள அறையைத் திறக்கும் பொழுது எங்களுக்குச் சற்று உதறலாகவே இருந்தது.

ஜகன் வைத்த இடத்திலேயே சாவிக் கொத்து இருந்தது. அதை எடுத்துக்கொண்டு நிமிரும்பொழுது அறையில் குறுக்காகக் கட்டிய வெள்ளைத் திரைக்குப் பின்னால் ஒரு கதவு இருப்பது தெரிந்தது. இந்தக் கதவின் மறுபக்கம் என்ன இருக்கக் கூடும் என்ற ஆவலில் அதைத் திறந்தோம். 'விர்' என்று வீசிய காற்று எங்களை மகிழச் செய்தது.

ஏதோ சொல்ல முடியாத பெரும் வியப்புடன் நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம்.

அந்தக் கதவை அடுத்து ஒரு வராந்தா இருந்தது. அந்த வராந்தாவில் காலை நீட்டியவாறு அமர்ந்திருந்தான் சோனால். எங்களைப் பார்த்ததும் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான். அவன் அருகில், அதுவரையில் படுத்து உருண்டு கொண்டிருந்த மனிதனும் எழுந்தான். அவன் தலைக்கு உயரமாக வைத்திருந்த மூட்டை எங்கள் கண்ணில் பட்டது. அதிலிருந்து நீட்டிக் கொண்டிருக்கும் ஆரஞ்சுத் துணி அது ஒரு பாவாடையாகத்தான் இருக்கும் என்று ஊர்ஜிதம் செய்தது. அவன் அந்த மூட்டையைச் சட்டென்று மறைக்க முற்பட்டபொழுது உள்ளிருந்த சலங்கை தான் இருப்பதைத் தெரிவிப்பதுபோல், அசைவால் ஒலியை ஏற்படுத்தியது.

''என் மச்சான், சாப். எனக்கு உதவியாக என்னுடன் இருக்கான் சாப்!'' என விவரித்தான் சோனால்.

நாங்கள் மூவரும் பதில் ஏதும் கூறாமல் மறு பக்கம் வந்துவிட்டோம். மச்சானுக்கு வாருகூட இடது கையாகத்தானே இருக்கிறது!

ஒவ்வோர் ஆவியும், வரும் பொழுதும் போகும் பொழுதும் அறையில் காற்று 'விர்' என்று வீசியதும், சலங்கை ஒலித்ததும், வெண் திரையில் நிழல் உருவமாக ஆவி தெரிந்ததும், மூன்று ஆவிகளுமே இடது கையையே பயன்படுத்தியது ஏன் என்பதும் இப்பொழுதல்லவா புரிகிறது!

எத்தனை சுலபமாக இந்தப் படிக்காத மனிதன் நம்மை ஏமாற்றி நூறு ரூபாய் சம்பாதித்து விட்டான் என ஆச்சரியப்பட்டேன் நான்.

''மாபெரும் வீரன் பெரும் மலை தடுத்துக் கீழே சாய்வதில்லை ரகு. மிகவும் சிறிய கல் தடுக்கியே குப்புற விழுகிறான். பெரிய மேதைகள் எல்லோருமே ஏமாந்துவிடுவது மிகச் சாதாரண மனிதனிடம்தான்!'' என்றான் சங்கர் அழுத்தமாக.

''போகிறது, போ! பொருத்தமான ஒரு முடிவைச் சொல்லியிருக்கிறானே! பெரும் கதாசிரியர்கள்கூடத் தோற்றுப் போக வேண்டும்'' என்றான் ஜகன்.

''இதைப் போய் நந்தினியிடமும் சரளாவிடமும் சொல்லுவோம். அவர்களாவது பீதி நீங்கியிருக்கட்டும்'' என்றான் சங்கர்.

''நன்றாகச் சொன்னாயே! தொலைந்தாய் போ நீ. தோல்வியையோ, ஏமாற்றத்தையோ பெண்களிடம் கூறலாமா? ஆயுள் முழுவதும் சொல்லிக் காண்பிக்கமாட்டார்களா? அவர்கள் சீட்டுக் கட்டி, பணத்தைக் கோட்டைவிட்டு வெளியே சொல்ல முடியாமல் அமுக்கென்று இருப்பது போல், சில ஏமாற்றங்களை, நாமும் நம்முள் வைத்துக் கொண்டுவிட வேண்டும்'' என அழுத்திக் கூறினான் ஜகன்.

நான் முறுவலித்தேன். ''இந்த ராதா ஸ்வாமி கோயிலை ஆயுள் முழுவதும் மறக்க முடியாது. நல்ல ஆவி உலகம். நல்ல கதை'' என்றேன். எங்கள் ஏமாற்றம் எங்களுக்கு நகைப்பாக இருந்தது. ''இந்த வழிகாட்டி கூறிய கதையே கற்பனையோ? கேசவ்பிரபு, காசிநாத், ஷோபா எல்லாருமே கற்பனைப் பாத்திரங்களாகவே இருக்குமோ?'' என்றேன் நான், சந்தேகம் மேலிட.

''இதில் சந்தேகப்படத் தேவையே இல்லை. வழிகாட்டிகள்கூட அற்புதமான கதாசிரியர்கள்தான்!'' எனக் கூறி உடன் நகைத்தனர் நண்பர்களும்.

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

# BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- *Attractive Fancy Dress material for ladies*
- *Immaculate Bush Shirtings for gents*
- *Decorative Tapestry and Curtain materials*
- *Priced cheaper than cotton fabrics*



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

SOBHAGYA-GRS

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon